# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு




சிலம்பு 15 தாது - மார்கழி 1937 பரல் 5

# பொருளடக்கம்



---



மேரி இராணி (Queen Mary)

ஓம்
செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-கடு ] தாது—மார்கழி [பரல்-ரு

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

### திருப்பாம்புரம்

துஞ்சுநா டுறந்து தோற்றமு மில்லாச்
சுடர்விடு சோதியெம் பெருமான்
நஞ்சுசேர் கண்ட முடையவென் னுதர்
நள்ளிரு ணடஞ்செயு நம்பர்
மஞ்சுதோய் சோலை மாமயி லாட
மாடமா ளிகைதன்மே லேறிப்
பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர் பயிலும்
பாம்புர நன்னக ராரே.

பதவுரை:—

மஞ்சு தோய் சோலை—மேகம் தவழும்படி நீண்டு வளர்ந்திருக்கின்ற மரங்களடர்ந்த சோலையில்,

மாமயில் ஆட—பெரிய மயில்கள் (அம்மேகத்தைக் கண்டு) களிப்புடன் ஆட (அதனைப் பார்த்து),

மாளிகை மாடம் மேல் ஏறி—வீடுகளின் மேலுள்ள உப்பரிகை மேலேறி,

பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர் பயிலும்—பஞ்சுக்குழம்பு ஊட்டப் பெற்ற மென்மையான அடிகளையுடைய பெண்கள் நடனம் பயில்கின்ற,

பாம்புரம் நல் நகரார்—திருப்பாம்புரம் என்னும் நன்மை பொருந்திய நகரத்திலுள்ள திருக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமான்,

துஞ்சும் நாள் துறந்து—இறக்கும் நாளில்லாது,

தோற்றமும் இல்லா—பிறக்கும் நாளுமில்லாத,

சுடர்விடு சோதி எம்பெருமான்—பேரொளிப் பொருளாயிருக்கிற எங்கள் தலைவராயும்,

நஞ்சுசேர் கண்டம் உடைய என் நாதர்—(திருப்பாற் கடலினின்று எழுந்த நஞ்சைத் தேவர்களும் பிறஉயிர்களும் உய்யும்பொருட்டு உண்டு,) உண்டதனாலாகிய கறுப்புக்கறையை அடையாளமாகத் தமது கழுத்திலே உடைய எனது தலைவராயும்,

நள்இருள் நடம்பயில் நம்பர்—உயிர்களுடைய நெஞ்சுத் தாமரையில் அவற்றின் மலஇருள் நீங்கும்படி இருள் செறிந்துள்ள நடு இரவிலும் நடனஞ்செய்யும் அன்பராயும் இருக்கின்றார்.

## விளக்கவுரை :—

மாளிகை மாடம் தன்மேலேறி—மாளிகை என்பது வீடு; மாடம்—அவ்வீட்டின் மேலுள்ள உப்பரிகை; தன்-அசை. மாடம் மாளிகை என்பதை மாளிகைமாடம் என மாறுக. மயில்கள் ஆடுதலைப் பார்க்க ஏற்ற இடம் உப்பரிகை ஆதலின் 'மாளிகை மாடம் மேல் ஏறி' என்றார்.

பஞ்சுசேர் மெல் அடிப் பாவையர் பயிலும்—கால்களுக்குப் பஞ்சுக் குழம்பு ஊட்டி அவற்றைச் செந்நிறமாகச்செய்தல் முற்காலத்துப் பெண்கள் வழக்கு. பாவை—சித்திரப்பதுமை. அது பதுமை போன்ற அழகுள்ள பெண்களுக்கு ஆதலால், ஆகுபெயர். பயிலுதல்—பலகால் பழகல். குடிப்பெண்கள் நடனஞ்செய்தல் முற்காலத்துத் தமிழ்ப்பெண்கள் வழக்காயிருந்தது என்பதைத் தேவாரத்தினாலும் பெரிய புராணத்தினாலும் நாமறியலாம்.

துஞ்சும் நாள் துறந்து தோற்றமும் இல்லா—துஞ்சுதல்—இறத்தல்; துறந்து—இல்லாது. தோற்றம் என்பது தோற்றும் நாள் அதாவது பிறக்கும் நாள். உம் இறந்தது தழீஇய எச்சமுமாம். இல்லா என்ற குறிப்புப் பெயரெச்சம் சோதி என்ற பெயரைக்கொண்டு முடிகிறது—பெருமான் என்ற பெயரைக்கொண்டு முடிகின்றது எனினும் பொருந்தும். இல்லாத என்பது இல்லா எனக் கடை குறைந்து நின்றது. சோதியும் சோதியுடைய பெருமானும் எப்பொழுதும் ஒருதன்மைத்தாயுள்ள நித்தியப்பொருள்கள். ஆதலின் 'துஞ்சுநாடுறந்து தோற்றமுமில்லா' சோதி எம்பெருமான் என்றார். சைவசமயக் கடவுளுக்குப் பிறப்பு இறப்புகளில்லாதிருப்பது முதன்மையான இலக்கணம். பிறப்பு இறப்புகளில்லாத கடவுள்தான் பிறப்பு இறப்புகளில் உழலுமுயிர்களை அவற்றினின்று நீக்கி வீட்டின்பம் அருள்செய்ய வல்லவன் ஆவன்.

> "செத்துச் செத்துப் பிறப்பதே என்று—பத்தி செய்
> மனப் பாறைகட்கேறுமோ—அத்தனென்றரியோடு
> பிரமனும்—துத்தியஞ் செய நின்ற நற்சோதியே"

என்று திருநாவுக்கரசு அடிகள் கூறினது காண்க.

சுடர்விடு சோதி எம்பெருமான்—பேரொளிப் பொருளாகிய சிவபெருமானது ஒளியினாலே உலகில் ஞாயிறு திங்கள்களும் பிற ஒளிப் பொருள்களும் தத்தமக்குரிய ஒளியோடு விளங்குகின்றன. அவ்வொளியினாலே தான் மக்களுக்கு உலக நெறியில் கருவி அறிவினாலாகும் ஆராய்ச்சி அறிவும், வீட்டு நெறியில் அருள் அறிவும் உண்டாகின்றன. அடிகள் அடியார்களையும் தம்முடன் சேர்த்து எம்பெருமான் என்றார். இதனாற் சிவபெருமானுடைய பேரறிவு கூறப்பட்டது. அடிகள திருப்பாசுரம் 5-வது பாட்டில் "சுடர் விட்டுளன் எங்கள் சோதி" என்று கூறினமை காண்க.

நஞ்சுசேர் கண்டமுடைய என் நாதர்—நஞ்சு என்பது இங்கே ஆகு பெயராய் நஞ்சினாலுண்டாகிய கறுப்புக் கறையைக் குறிக்கின்றது. சிவபெருமான் தேவர்களுக்கும் பிறஉயிர்களுக்கும் நேரிட்ட துன்பத்தைச் சகியாது அத்துன்பத்தைத்தானே ஏற்றுக்கொண்டு அவர்களை அதனின்றும் விடுவித்து அந்நஞ்சினையும் அமுதாகச் செய்யவல்ல பேராற்றலுடைய தலைவன் என்பது இதனாற் குறிப்பிடப்பட்டது. இதுபற்றி அவனுக்கு நீலகண்டன் என்ற பெயர் வழங்கப்படுகின்றது. "தன்னையடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர்தங் கடனாவதுதான்" (1-4) என்று திருநாவுக்கரசு அடிகளும், "தொழுவாரவர் துயராயின தீர்த்தலுனதொழிலே" (1-9) என்று சுந்தரமூர்த்தி அடிகளும் கூறுதல் காண்க. இதனால் சிவபெருமானது பேராற்றலாகிய செயல் கூறப்பட்டது.

நள் இருள் நடம் பயில் நம்பர்—நள்-நடு; செறிவையுங் குறிக்கும். சிவபெருமான் ஆணவமல இருள் நிறைந்திருக்கின்ற மாயா உலகிலும் மக்களுடைய உள்ளத்திலும் அவ்விருள் நீங்கி ஒளிவிளக்கமுண்டாகும்படி ஓயாது நடனஞ் செய்கின்றான் என்பது கூறப்பட்டது. அவன் நடனஞ் செய்யாவிட்டால் உலகிலுள்ள உயிர்ப் பொருளும் உயிரில் பொருளுமியங்கா.

> "தில்லை மூதூராடிய திருவடி—பல்லுயிரெல்லாம்
> பயின்றனனாகி எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி"

என்று மாணிக்கவாசக அடிகள் திருவாசகம் கீர்த்தி அகவலிலும் 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே' என்று அவர் சிவபுராணம் அகவலிலும் கூறியருளினமை காண்க.

நம்பர்—நண்பர் என்ற சொல்லிலுள்ள ணகர வொற்றுப் பின்வரும் பகர உயிர்மெய்க்கு இனவெழுத்து ஆகிய மகரவொற்றாய்த் திரிந்தது. தன் இனந்தழுவல் எழுத்துக்களிலுங் காணப்படுகின்றது. உயிர்கள்மேல் வைத்த அன்பினால் ஐந்தொழில் குறித்து நடனஞ் செய்தலால் அடிகள் அவரை 'நம்பர்' என்றார். இதனால் சிவபெருமானது பேரன்பு கூறப்பட்டது.

—மா. வே நெல்லையப்பபிள்ளை.

---

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## தமிழிலக்கணத் தத்துவக்கிடை

[ஈப்போ. திரு. தியாகராஜன் அவர்கள், G. M. V. C.]

உலக உற்பத்தி, தோற்றம், வேற்றுமை முதலியவை களுக்கு ஒப்பவே இலக்கணத்தையும் தமிழில் நம்முன்னோர் அமைத்தனரோ?

" அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு " (திருக்குறள்)

" அகரவுயி ரெழுத்தனைத்து மாகிவேறு யமர்ந்ததென
வகிலாண்ட மனைத்துமாகிப்
பகர்வன வெல்லாமாகி........" (தாயுமானவர்)

என்னும் பாக்களில் நம் சான்றோர் எடுத்துரைத்த உபமானங்கள் முற்று முண்மையோவென ஆராய்வோம்.

### உலக உற்பத்தி (அல்லது பிறப்பு)

" மூதவா வென்குணமவை மூன்றினும்
பேதமாகும் பிரகிருதி தன்னிலே
காதலால் வைப்பன்யான் கருவக்கருப்
பூதம்யாவும் புலப்படுகின்றவே " .

(பகவத்கீதை 14-அத்தியாயம் 4-ம் பாட்டு)

" இந்த வண்ணத்தினுலிவ் வுலகிடை
வந்த யோனியெலாம் வருவித்திடுந்
தந்தையானவை யீன்றளிக் கின்றதா
யந்த வென்னுடை மாயைய தாகுமால் "

(ப. கீ. அ. 14 : 5.

" மண்ணு நீரு மெரிதீயும் வாயுவுமவ்
வானிேைடு மனபுந்தியு
மெண்ணு நீர்மைகளில் யானெனும் பதமுமென்னு
மெட்டு மிவையன்றியே
பண்ணு நீர்மைகளின் மேலதா யுலகி
லியாவையுங் கொடுபரித்துடற்
கண்ணு நீடுயிரு மாகியென்னுடைய மாயை
நிற்பது கைவேலினேய் " (ப. கீ. அ. 7 : 3)

என்பதாகக் கண்ணபிரான் பகவற் கீதையில் கூறினர்.

## எழுத்தின் பிறப்பு

*" நிறையுயிர் முயற்சியினுள் வளிதுரப்ப வெழும*
*ணுத்திர ளுரங்கண்டமுச்சி மூக்குற்றிதழ்*
*நாபல்லணத் தொழிலின் வெவ்வேறெழுத் தொலி*
*யாய்வரல் பிறப்பே "*

(பவண—எழுத்து : 4)

*எனப் பவணந்தியார் தம் இலக்கணத்தில் கூறினர்.*

*முற்கூறிய வுலகப் பிறப்பிற்கும், பிற்கூறிய எழுத்தொலியின் பிறப்பிற்குமுள்ள ஒப்பமைப்புகளை ஒப்பிட்டு நோக்குவாம்.*

*எங்கும் பராபரமாய் நிறைந்து விளங்கும் மூலபுருஷனைப்* போன்ற நிறையுயிர், *மூலப்பிரகிருதி யல்லது மாயையாகிய* உள்வளியை (Cosmic matter) *முயற்சியெனும் கிரியையால் துரப்ப, எழும் அணுத்திரள் மாயையின் முக்குணங்களை யடைந்து, எட்டுத் தத்துவங்களாகிய மனமெனும் உரம், யானெனு மகங்கார தத்துவமாகிய கண்டம், புத்தியெனு முச்சி, பிருதுவித் தன்மைவாய்ந்த பல், அப்புத்தன்மை வாய்ந்த நா, தேயுபோன்ற (அழல்போன்ற) வுதடு, வாயுத் தன்மையேற்ற மூக்கு, ஆகாயமாகிய* (Empty space) *அண்ணம் என்னும் எட்டுத் தத்துவங்களின் பஞ்சீகரணத்தால் அல்லது கலப்பால் வெவ்வே றெழுத்தொலிகள் பிறந்தன.*

*" மன்னவுடல் யாவையினு மன்னியறிவாய்நின்*
*றன்னுமுயி ரியான் "*

(ப. கீ. அ. 13 : 3)

*என்று கோபாலன் கூறியதற்கேற்க, தன்னியக்கமற்ற மெய்களுக் காதாரமாயிருக்கும் எழுத்துக்களை உயிர் எனவும், அவ்வுயிரெழுத்துக்களுக் கிடந்தரும் எழுத்துக்களை* மெய் *அல்லது உடல் எனவும் பெயரிட்டனர்.*

*உயிரு முடலும் புணர்ந்து ஸ்தூல சரீரமுண்டாவதற்கு முன் காரண சரீரமும், சூட்சும சரீரமு முளதாதற்கேற்ப, ஆயுதவெழுத்தைக், காரண சரீரமெனவும், மெய்யெழுத்தை சூட்சும சரீரமெனவும் கூறலாம்.*

*இவ்வெழுத்துக்களின் உச்சரிப்பை யோர்ந்துபார்க்கின், தூரத்திலுள்ள காரண சரீரத்தையுணர்த்த, தூரத்தை யுணர்த்தும் அகரச்சுட்டை ஆயுதவெழுத்துடன் சேர்த்தொலித்தும், இது வியக்த—அவ்வியக்தநிலையென விளக்கத், தனிநிலையெனப் பெயரிட்டும், முக்குணங்கள் வாய்ந்ததென்பதைக் காட்ட ஆயுதத்தை முப்புள்ளியிட்டு மெழுதினர்போலும்.*

சூட்சும சரீரமோ ஸ்தூல சரீரத்திற்கருகே யுளதாதலால் சூட்சும சரீரத்திற் கொப்பிட்ட மெய்களை, அருகேயுளதைக் காட்டும் இகரச்சுட்டைச் சேர்த்து இயங்கச்செய்தனரெனலாம்,

"மும்மல வெழுத்தாம் மூவாறு மெய்யையும்
தனித்தியக்கும் முயிர் இகார மென்க
தனிநிலை தானே யியங்கா தமரிற்
தனித்தியக்கு முயிர் அகார மென்க"

(P. V. மாணிக்க நாயக்கர்)

மெய்களில் முக்குணங்களாகிய சத்வ, ரஜஸ், தமஸ் என்பவை ஒன்றினொன்று மேலாகித் தடித்திருப்பதற்கொப்ப மெய்யெழுத்துக்களிலும் இக்குணங்களின் மேன்மையைக்காட்ட அவ்வெழுத்துக்களை மூவினமாகப் பிரித்தும், அவ்வாறு பிரிந்தவெழுத்துக்கள் மும்மாயை யுடையனவாதலால் அவைகளை (பிரிவுகளை) வல்லினம் (ஆணவமலம்) மெல்லினம் (காமியமலம்) இடையினம் (மாயாமலம்) எனவும் பெயரிட்டனர்.

ஆணவம் மிகுந்தபோது வல்லினம் மிகுதலையும், காமமுற்றபோது மெல்லினம் மேலிடுதலையும், மாயையுற்றபோது இடையினம் பெருகுதலையும் விளக்க, திருவாளர் P. V. மாணிக்க நாயக்கரவர்கள் அவர் எழுதிய "The Tamil Alphabet: Its mystic Aspect" என்னும் நூலில் கம்பராமாயணத்திலிருந்து பாக்களை உதாரணமாகக் காட்டியுள்ளார்.

## Primary Creations

இவ்வகையாகப் பிறந்து, மாயையின் குணங்களை யுமேற்றுநிலைத்த வெழுத்துக்களை

"உயிரு முடம்புமா முப்பது முதலே"

யெனப் பெயரிட்டு, இவை Primary Creations எனவும் காட்டினர்.

உயிர் மெய்யெழுத்துக்களையும், ஆய்தம், அளபெடை, குறுக்க மிவற்றையும் சார்பெழுத்து (Secondary Creations) எனவும் பெயரிட்டனர்.

மேற்கூறியதுபோல் தமிழ் எழுத்துக்கள், நம் சாஸ்திரங்களுக்கேற்ப பிறப்பு முதலியன வேற்றதுமன்றி, தற்கால அறிவியன் முறைக்கேற்க, உயிரை Energy எனவும், மெய்யை Elements எனவும், உயிர்மெய்யை Compounds எனவுங் கூறினும் பொருந்தும்.

இவ்வாறன Energy, Elements and Compounds-கள் புணர்ந்தும், பிரிந்தும் வெவ்வேறு பொருள்களாக நிலவுதலுக்கான புணர்ச்சி விதிகளையும் தற்கால சாஸ்திரங்கள் வரம்பறுத்துக் கூறுகின்றன.

அஃதேபோல் நம் முன்னோரான இலக்கணத்தாரும் உயிரும், மெய்யும் எவ்வாறு புணர்ந்தும், பிரிந்தும் உலகப் பொருள்களைக் குறிக்கும் சொற்களாயின வென்பதற்கு விதிகள் வரைந்தார்.

## புணர்ச்சி

இதைக் குறித்தவிதிகளில், உயிரெழுத்துக்கள் ஆத்மாவைப்போன்றவையாகையால், அத்தன்மையை யுணர்த்த,

"மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே" என்னும் விதியால் உயிரைக்காட்டுவது மெய்யேயெனவும், "உயிர் அழியாது, திரியாது என்பதை யுணர்த்த உயிர்விட்டோடும்" உயிர்நீங்கும்" என்ற, சூத்திரங்களை இயைத்தும், உயிர்நீங்கிய பின் அதனால் இயக்கப்பட்ட உடல் தன்னிலையையடைவது போல (Dust thou art and to dust thou returneth) "மெய்யுயிர் நீங்கின் தன்னுருவாகும்" எனவும் சூத்திரங்களில் தத்துவ உண்மைகளை நன்குவிளக்கிக் காட்டினர்.

"ஊறுபடவொன்றினுளே பிறத்தல், பிறந்துளவாதல்
வேறுபட வளர்தல், வளர்ந்தயலொன்றாய் விளைந்தமைதல்
மாறுபடத்தேய்தல், அறமாய்தலென வருகின்ற
வாறியல்பும், உடம்பன்றி யறிவடையாவாதலினால்"

[ப. கீ. அ. 2 : 23.]

என்றுரைத்த கண்ணனின் வாக்கிற்கேற்க நன்னூலாரும் மெய்க்கே தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் விகாரங்கள் கூறினார். இத்துடன்விடாது, உலக இயற்கையைத் தழுவி இப்புணர்ச்சியை இயல்புப்புணர்ச்சியெனவும், விகாரப் புணர்ச்சியெனவும் பகுத்தனர். இது எவ்வாறெனின், இயற்கையிலேயே இருவாயுக்கள் புணர்ந்து ($Co_2$) கரியமலவாயுவெனவும், $H_2O$ நீரெனவும் நிலவனபோல்வன இயல்புப் புணர்ச்சி; விகாரப்புணர்ச்சியோ, $Ca\,Co_3 + 2Hcl$ என்னுமிருவஸ்துக்கள் புணருங்காலத்தில் $Co\,Co_3$ என்பது திரிந்து $Ca\,Cl_2$ என்பதாக நிலைத்தும், $H_2o\,Co_2$ என்பவை தோன்றியும் $_2H\,Cl$ என்பது கெட்டும் (ஒழிந்தும்) போவது போல இயலுவன.

மேற்கூறியவாறு Energyயும், Elementsம், Compounds-புணருவதால் நிலவன பொருள்கள். இஃதேபோல் நம்மொழியினெழுத்துக்களும் தனித்தும் புணர்ந்தும் குறிப்பது பொருளே யென்பதைக்காட்ட,

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"
[தொல்காப்பியம், சொல்லதிகாரம்., 155.]

எனச்சூத்திரம் விதித்தனர். (தொடரும்)

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### மருதம்

*தலைமகனது பிரிவாற்றாது வருந்திய தலைவி தோழிக்குச் சொல்லியது.*

கழார்க் கீரனெயிற்றியார் பாடியது

35. நாணில மன்றவெங் கண்ணே; நாணேர்பு
சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ
நுண் ணுறை யழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே.

என்பது பிரிவிடை மெலிந்த கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

**பதவுரை:—**

நாள் நேர்பு—முதிர்ச்சியுறும் நாளையடையப் பெற்றதால்; பாம்பின் சினைச்சூல் முதிர்ப்பு அன்ன—பாம்பினுடைய முட்டையாகிய முதிர்ந்த கருவைப்போல, கனைத்த கரும்பின்—திரட்சிபெற்ற கரும்பினது, கூம்புபொதி அவிழ—தலைக் குவிவு கட்டவிழும்படியாக, நுண்உறை—நுணுகிய உறைத் தலையுடைய, அழிதுளி—மிக்க மழைத்துளி, தலைஇய—சொரியப்பெற்ற, தண்வரல் வாடையும்—குளிர்ச்சி பொருந்திய வருகையையுடைய வாடைக்காற்றும், நம் பிரிந்தி

சினோர்க்கு—நம்மைவிட்டுப் பிரிந்து சென்ற தலைவர்க்கு, அழலே — நெருப்பைப்போல் வருத்துவதாமோ? (ஆகா; ஆயின் வந்திருப்பார்) (ஆதலின்); மன்ற—உறுதியாக, எம் கண்ணே—எம்முடைய கண்கள், நாணில—வெட்கமற்றன.

தண்வரல் வாடையும் (வந்தது); நம்பிரிந்திசினோர்க்கு அழலே; கண்ணே; மன்றநாணில என்று பொருத்துவோமாயின் அழலே என்பதற்கு அழலில்லை என்பது பொருள்; பிரிந்திசினோர்க்கு என்பதில் நான்கனுருபு பொருட்டு என்னும் பொருளில் வந்தது என்க.

மன்ற—நிச்சயமாக. கண் கலுழ்ந் தன்மையதாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. நாள் + நேர்பு = நாணேர்பு. சினைப் பசும் பாம்பு என்பதற்குக் கொம்பிலுள்ள பச்சைப்பாம்பு என்பாருமுண்டு. சினைச்சூல் எனின் உறுப்பாகிய முட்டையைக் கொண்ட கருப்பம் என்க. கனைத்த—திரண்ட, செறிந்த. உறை—உறைத்தல், மழைத்துளி. தலை இய—சொரிய; "தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து" (முருகு.9.) அழிதுளி—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை; அழிக்கத்தக்க மிக்கதுளி. "அழிதுளி தலைஇய புறவு" (ஐங். 413). வாடை—வடகாற்று. ஆகுபெயராய் அக்காற்று வீசும் முன்பனிக் காலத்தை யுணர்த்திற்று. அழல்—அழுதல்—தீ; பசும் பாம்பின் சூல் கரும்பின் கூம்பிற்கு உவமை கூறப்பட்டது. வாடை வந்தும் தலைவன் வந்திடாமையால் தலைவி ஊடல் தோன்ற, அவன் வரவை எதிர் நோக்கிநின்ற கண்கள் நாணில என்றாள் 'வண்ணம் பசந்து புலம்புறு காலை, உணர்ந்தபோல உறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே"—(தொல். பொருளி. 8 சூ. 1147). என்பதனால் தலைவி கண்ணை உணர்ந்தனபோல நாணில என்றாள் என்க.

மேற்கோள் விளக்கம்:—

"நாணில மன்றவெம் கண்ணே"—"வண்ணம் பசந்து" (தொல்-பொருள்-சூ. 8) என்பதற்கு மேற்கோள்.

"தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கே"—இதில் ' "அழலானது' என்று வேற்றுமை யுருபுகள் ஈற்றினும் தொகுமாலோ எனின், அது ஒரு பெயரனையதாய் உருபு முதலாயின எலாமையின், தொகை விதியாற் றொக்கதாகா; செய்யுள் விகார வகையால் தொகுக்கப்பட்டது என்க" என்பதற்கு மேற்கோள்.

இச் செய்யுளை இயற்றியவர் கழார்க்கீரனெயிற்றியார் என்றிருக்கிறது. சில விடங்களில் கிழார்க்கீரன் எயிற்றியார் என்றும் காணப்படுகின்றது. கழார்—ஓரூர். கிழார்—வேளாண் மரபினர்.

மெய்ப்பாடு—வருத்தம் பற்றிய இளிவரல்.

பயன்—ஆற்றாமை அறிவித்தல்.

## குறிஞ்சி

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் குறித்த காலத்து வாராது பிரிவு நீட்டித்தவழி, தலைமகள் ஆற்றாளே என வருந்திய தோழிக்குத் தலைவி கூறியது.

பரணர் பாடியது

36. துறுக லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாடன்
நெஞ்சு களனாக 'நீனையலேன்யான்' என
நற்றோண் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சின முரைத்தது
நோயோ, தோழி, நின்வயி னானே.

என்பது வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளெனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகளாற்றுவித்தது.

பதவுரை:—

தோழி — தோழியே; துறுகல் மாணை மாக்கொடி— திண்ணிய கற்பாறையினிடத் துள்ளதாகிய மாணைக்கொடி, அயலது துஞ்சுகளிறு இவரும்—அயலே உறங்கும் யானை யின்மீது தாவிப்படரும், குன்றநாடன்—மலைநாட்டுத் தலைவன், நல்தோள் மணந்த ஞான்றை—எனது நல்லனவாகிய தோள்களைப் பொருந்திப்புணர்ந்த அந்நாள்; (நீ)நெஞ்சுகளன் ஆக—(நீ) என் நெஞ்சத்தை இடமாகக் கொண்டனையாதலின், நீனையலேன் யான்—நீயலாது (நின்னினும் வேறுபட்டவன்) நான் அல்லேன்; என—என்று, அவன்—அத்தலைவன், தாவாவஞ்சினம் உரைத்தது—பொய்க்காத சூளுரை கூறியது; நின்வயின்—உன்னிடத்து, நோயோ—துன்பம் தருவதோ?

மற்று, ஆன், ஏ—அசைகள்.

துறுகல்-வலிமை செறிந்த கற்பாறை.

மாணை—ஒரு கொடிவிசேடம். துஞ்சுகளிறு—வினைத்தொகை. துறுகலயலது துஞ்சுகளிறு எனக் கூட்டுக. களன்—இடம். மணத்தல்—தழுவுதல், பொருந்தல். தவா என்பது தாவா என நின்றது என்பாரும் உண்டு. தவா—பொய்க்காத, தவறாத, கெடாத.

ஞான்றை—ஐ—சாரியை. மற்று—அசை. தோழி—அண்மை விளி. நின்வயின்—நினக்கு எனின் உருபு மயக்கம்.

மேற்கோள் விளக்கம் :—

"உயிரினும் சிறந்தன்று நாணே" என்னும் சூத்திரத்தில் "ஆவகை பிறவுந் தோன்றுமன் பொருளே" என்றதனால், இவள் கூற்றுத் தோழிக்கும் தலைவற்குமே தோன்றுவதென்க; என்றுகூறி, "இன்னும் அதனானே தோழியைத் தலைவி ஆற்றுவித்தலும் கொள்க" என்பதற்கு மேற்கோள். —(தொல். களவு. பக். 490)

மாணை மாக்கொடி:—

(1) "மாணையின் கொடியால் வீக்கி"—(கம்ப. யுத்த ஒற்றுக் கேள்வி 27)

(2) "வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாணையின் கொடியால்" —(கம்ப. அயோ. வனம் புகு. 36)

1. "நெஞ்சுகளனாக நீனையலேன் யானென"
   (அ) நெஞ்சுகளனாக நீயலன் யானென.
   (ஆ) நெஞ்சுகளனாக நீயலென் யானென
   (இ) நெஞ்சுகளனாக நீயலேன் யானென (பிரதிபேதம்)

2. "தாவா வஞ்சின முரைத்தது"
   (அ) தவாஅ வஞ்சினமுரைத்தது (பிரதிபேதம்)

இறைச்சி:—மலையின் பக்கத்துப் பிறந்த மாணைக்கொடி தங்கிய யானைமீது படருவதுபோலும் குன்றநாடன் என்றது வரைந்து கொள்வதற்கு வேண்டிய பொருள் கொணர்ந்து வரைந்துகொண்டு கூடியிருக்கப் பிரிந்த பிரிவும், மறந்து கைவிட்டுப் பிரிந்தாற்போன்று நினக்குத் துயர் தந்தது என்னை எனின் உண்மையை அறிய முடியாததே ஆம் என்பது.

மெய்ப்பாடு—வருத்தம்பற்றிய இளிவரல்.

பயன்—தோழியை ஆற்றுவித்தல்.

---

## தகர்

" தகர் " என்னுஞ் சொல்லுக்கு ஆட்டுக்கடா என்றும், உடைத் தெறி என்றும் இரண்டு பொருளுண்டு. ஆங்கிலத்தில் இச் சொல்லுக்கு நேர் சொல்லான ( Ram ) ரேஅம் என்ற சொல்லுக்கும் இவ்வாறே இரண்டு பொருள்கள் காணப்படுவது வியக்கற்பாலதாம். ரேஅம் என்பது ஆட்டுக்கடாவையும், பகைவர் அரண்களை உடைத்து அழிக்கப் பயன்படுத்தப்பட்டுவந்த கடாயின்தலையுடைய மோதுவாரை யையும் குறித்து, அதன்வழி பின்னர், " இடித்து உடை " என்னும் பொருளையுங் கொடுக்கும்.

(கா. சிவ. க.)




## சர். ஹம்ப்ரி டேவி

## (1778—1829)

[திரு. என். குழந்தைவேலன் அவர்கள், B. A.]

மின்சாரத்தால் ஒளியுண்டாக்கியும் அதன் உதவியால் விளக்குகள் எரியும்படி செய்தும் உலகிற்கு முதன் முதலாகக் காட்டியவர் ஸர். ஹம்ப்ரி டேவி என்னும் († இயைபு நூற்) புலவராவர். இவர் இளமையிலேயே புதிய கதைகள் இயற்றுவதில் வல்லுநராய் இருந்தார். ஆகலின் பள்ளிச் சிறுவர்கள் இவரது கதைகளைக்கேட்க விரும்பி எந்நேரமும் இவர் வீட்டில் ஆவலோடு குழுமியிருப்பார்கள். டேவி எவருமறியாத புதிய விளையாட்டுக் கருவிகளைக் கண்டுபிடித்து அவற்றைத் தமது தோழர்களுக்கு வழங்கி அவர்களை மகிழ்விப்பார். இவர் கல்விபயின்ற பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் குறும்புசெய்யும் பிள்ளைகளின் செவிகளைக் கிள்ளிவிடுவது வழக்கம். டேவி ஒரு நாள் தமது இரு செவிகளிலும் ‡ பசைத் துணிகளை ஒட்டிக்கொண்டு பள்ளிக்கு வந்தார். ஆசிரியர் இதுகண்டு ஏன் இவ்வாறு செய்தாய் என்று கேட்டபோது டேவி சிறிதும் தயங்காது தமது செவிகளைத் துன்பப்படாது காத்தற்குத் தாம் அவ்வழி கண்டுபிடித்ததாய்க் கூறினர்.

டேவி எதையும் நுட்பமாய் ஆராய்ந்து அறிந்து கொள்ளும் ஆற்றல் படைத்திருந்தார். இவருக்கு ஓவியம் வரைவதிலும் புத்தகங்கள் படிப்பதிலும் மிகுந்த விருப்பம் உண்டு. ஆயினும் கல்வி பயில்வதற்குப் போதிய பொருளில்லாது இவர் பள்ளியை விட்டு அகன்று தனது பதினேழாவது அகவையில் பேன்ஸான்ஸ் என்னும் இடத்தில் ஒரு மருத்துவரிடம் வேலைக்கு அமர்ந்தார். இவர் மருத்துவ நூலிற் பயிற்சி பெறவேண்டுமென்று பெரிதும் ஆவல்கொண்டார். இவர் தமது ஓய்வு நேரங்களில் மருந்துக்கடையின் மேடைக்குச் சென்று தனிமையாக இருந்து பல்வேறு ‖ ஆய்வுகள் செய்து கொண்டிருப்பார்.

---

* Sir Humphry Davy. † Professor of Chemistry. ‡ Plaster. ‖ Experiments.

* டாக்டர் கில்பெர்ட் என்னும் ஓர் அறிவியற் புலவர் பென்சான்ஸ் நகருக்கு வந்திருந்தபோது டேவியைத் தற்செயலாய்க் கண்டார். மிக்க இளமையிலேயே டேவிக்கு இயைபு (ரசாயன) நூலாராய்ச்சியில் இருந்த ஆர்வத்தைக்கண்டு டாக்டர் கில்பெர்ட் அவரைத் தமது உறைவிடமாகிய † பிரிஸ்ட்டல் நகருக்கு அழைத்துச்சென்றார். கில்பர்ட் ஆராய்ச்சிக்குரிய புத்தகங்களையும் மற்றும் பல வசதிகளையும் டேவிக்கு மிகுந்த அன்புடன் உதவினார். இவையுமன்றி கிளிவ்டன் மருத்துச் சாலையில் (Clifton Hospital) டேவியை உதவி மருத்துவ வேலையில் அமர்த்தினார். டேவி அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு ஊக்கத்தோடு உழைத்துவந்தார்.

கிளிவ்டன் நகரில் இவர் பல அறிஞர்களுடன் பழகிவந்தார். சதே (Southey), காலரிட்ஜ் (Coleridge) என்னும் ஆங்கிலக் கவிஞர்களும் இவருக்கு அறிமுகமாயினர். இவர் பலதிறப்பட்ட அறிவியல் ஆராய்ச்சிகள் நடத்தியதன் பயனாக இவர்தம் புகழ் நாடெங்கும் பரவத் தலைப்பட்டது. இவர் 1807-ஆம் ஆண்டில் பொட்டாசியம் (Potassium) என்னும் ஓர் உப்பைக் கண்டுபிடித்தார். இதைத் தண்ணீரில் போட்டவுடன் தீப்பிடித்து வெடிப்பதையும் அங்கு மிங்கும் மீன் போல் நீந்திச் செல்வதையும் கண்டு மக்கள் வியப்புற்றனர். இவ்வுப்பு வெடிமருந்து, தீக்குச்சி முதலியன செய்வதற்கு இன்றியமையாததாக இருக்கின்றது. டேவி நீரில் மின்சாரத்தைப் பாய்ச்சி அதினின்றும் உயிர்வளி (Oxygen)யையும் நீர்வளி (Hydrogen) யையும் வேறுகப் பிரித்துக்காட்டினார். இவ் இரண்டு வளிகளும் சேர்ந்து நீர் ஆகின்றதென்னும் உண்மையை இவர் நன்கு விளக்கிக்காட்டினார். இவரது ஆராய்ச்சிகளின் முடிவுகளைக் காண ஆங்கில அறிஞர் பலர் ஆவலுடன் எதிர்நோக்கி இருந்தனர்.

சின்னட்கழித்து இவருக்கு இலண்டன் அரசர்கல்லூரியில் (Royal Institution) இயைபுநூற்புலவர் (Professor of Chemistry) பதவி கிடைத்தது. இவர் தமதுவாழ்நாள் முழுவதையும் அறிவியல் ஆராய்ச்சிலேயே கழிக்க வேண்டுமென உறுதி செய்துகொண்டார். கல்லூரியில் இவருக்கு ஓய்வு மிகுதியாக இருந்ததால் இவர் பழையபடி ஆய்வுகள் நடத்தத் தொடங்கினார். இவர் பல இடங்களுக்கும் சென்று தாம் ஆய்ந்துணர்ந்த உண்மைகளை எடுத்து விளக்கினார். இவர்தம் சொற்பொழிவுகளைக்கேட்கப் பல்லாயிரக் கணக்கானமக்கள் குழுமினர். இவருக்கு வரவேற்புகளும் வாழ்த்துக்களும் பரிசுகளும் ஏராள

*Dr. Gilbert. † Bristol.

மாய் வந்து குவிந்தன. இவர் வயதிற் குறைந்தவரேனும் அறிவில் முதிர்ச்சியுற்றிருந்தது கண்டு யாவரும் போற்றிப் புகழ்ந்தனர். சில ஆண்டுகள் கழித்து இவர் அரசர் கழகத்தின் அங்கத்தினராகத் (Fellow of the Royal Society) தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

டேவி புகழொடு தோன்றிய அக்காலத்திற்றான் மின்சார ஆராய்ச்சியில் ஈடுபட்டார். மின்சாரத்தால் சிறந்த ஒளி உண்டாக்கலாமென்பதை இவர் முதன்முதலாகக் கண்டுபிடித்தார் மின்சாரத்தை இரு கம்பிகளின் வழியாகப் பாய்ச்சி அக் கம்பிகளின் மேல்முனைகள் ஒன்றையொன்று நெருங்கும்படி செய்தவுடன் அம்முனைகளின் இடையே ஓர் ஒளி தோன்றிற்று. இம் மின்சார ஒளியினால் ஏற்பட்ட வெப்பம் கம்பிகளையும் எரிக்கும் ஆற்றல் உடையதாக இருந்தது. ஆகவே டேவி அக்கம்பிகளின் இரு முனைகளிலும் கரிக்கம்பிகளைப் பொருத்தி மீண்டும் தமது ஆய்வுகளைச் செய்துபார்த்தார். கரிநுனிகள் மின்சாரத்தால் சூடேறிப் பின்னர்ச் சுடர்விட்டு எரிந்தன. டேவிக்குமுன் பல அறிஞர்கள் மின்சாரத்தின் வியத்தகு செயல்களை ஆராய்ந்துவந்தனர். ஆயினும் டேவியே முதன்முதலாக 1812-ஆம் ஆண்டில் மின்சாரத்தின் உதவியால் விளக்கெரித்துக் காட்டினார்.

டேவியால் கண்டுபிடிக்கப்பட்ட இவ்விளக்கில் தோன்றிய வெளிச்சம் சிறிதுநேரமே நிற்கவல்லதாக இருந்தது. அறிஞர் பலர் மின்சாரவிளக்கு அவியாமல் நீண்டநேரம் எரியும்படி நல்ல முறையில் அமைக்க முயன்றனர். தாமஸ் ஆல்வா எடிசன் (Thomsa Alva Edison) என்னும் மின்சார அறிஞர் தமது சிறந்த திறமையை இவ்வாராய்ச்சியிற் செலுத்தினார். இவர் ஊணுறக்கமின்றி மிகவும் வருந்தி உழைத்து முடிவில் 1879-ஆம் ஆண்டில் ஒரு சிறந்த மின்சார விளக்கைச் செய்து முடித்தார். காற்று நீக்கப்பட்ட கண்ணாடிக் குமிழிக்குள் நூல்போன்ற மெல்லிய கரிக்கம்பியை (Carbon wire) அமைத்து அதன்வழி மின்சாரத்தைப் பாய்ச்சியபோது அக்கம்பியிற் சூடேறி வெளிச்சம் உண்டாயிற்று. கரிக்கம்பி செய்வதற்கு ஒருவகை மூங்கில்நாரைப் பயன்படுத்தினர். இதற்குப்பின் 1908-ஆம் ஆண்டுமுதல் மூங்கில் நாருக்குப் பதிலாக செயற்கைக்கரி பயன்படுத்தப்பட்டது. டேவியால் கண்டுபிடிக்கப்பட்ட மின்சாரவிளக்கு சற்றேறக்குறைய நூறு ஆண்டுகள்வரை பல்வேறு மாறுதல்கள் அடைந்து இறுதியில் பொதுமக்களுக்குப் பயன்படும் முறையில் மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றது

—டேவி 1813-ஆம் ஆண்டில் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். வெனிஸ்

(Venice) நகரத்தில் இவர்தம் அறிவுரைகளைக் கேட்க பைரன் (Byron) என்னும் ஆங்கிலக் கவிஞரும் வந்திருந்தார். அக் கூட்டத்தில் அவருக்கு அருகில் அமர்ந்திருந்த ஒரு மாது டேவி எதில் வல்லவரென வினவினாள். அதற்கு பைரன் என்னும் அப்புலவர்பெருமான் டேவிக்குத் தெரியாதது ஒன்றுமில்லை யென்றும், அறிவுடையார் எல்லாமுடையர் என்றும் கூறினாராம். இதனால் டேவியின் பெருமை நன்கு உணரப்படும். இரண்டு ஆண்டுகள் கழித்து டேவி ஸ்காட்லாந்து (Scotland) நாட்டிற்குச் சென்றார். அஞ்ஞான்று நார்த்தம்பர்லாந்து (Northumberland) என்னு மிடத்தி லுள்ள சுரங்கங்களில் அடிக்கடி தீப்பிடித்ததால் ஆங்கு வேலை செய்யும் தொழிலாளர்கள் வெந்தணலின் கொடுமைக்கு அஞ்சி நடுக்கங்கொண்டிருந்தனர். சதுப்புநிலத்தில் உண்டாகும் ஒருவகை ஆவி (Marsh gas) தீப்பிடித்து வெடித்து மக்களுக்குத் தீங்கு விளைவித்தது. இதனால் விளக்கு முதலியவற்றைச் சுரங்கத்தினுள் எடுத்துச்செல்ல இயலாதுபோயிற்று. இதனைக் கேள்வியுற்ற டேவி மிகவும் இரக்கமுற்றுத் தீக்கோளைத் தடுத்தற்கு ஒருவழி கண்டுபிடிக்க முயற்சிசெய்தார். மெல்லிய இரும்புவலைக்குள் (Wire gauze) எரிகிற தீ, வெளியிலுள்ள அனற்காற்றைப் பற்றவைக்கமுடியாது என்பதை இவர் தமது ஆராய்ச்சியாற் கண்டுபிடித்தார். முடிவில் 1815-ஆம் ஆண்டில் ஒரு விளக்கைச் செய்துமுடித்தார். இதைச் சுற்றிலும் மெல்லிய இரும்புக்கம்பிகளால் ஆகிய வலை ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. இவ்விளக்கைச் சுரங்கத்தினுள் எடுத்துச்சென்றபோது தீப்பிடித்தல் வெடித்தல் முதலிய இடையூறுகள் ஒன்றும் நேரிடாதது கண்டு மக்கள் அளவிலா ஆனந்தமடைந்தனர். இவ்விளக்கு தீக்கோளைத் தடுத்தது மன்றிச் சுரங்கத்தில் வேலைசெய்பவர்களின் உயிர்களைப் பாது காத்தற்கும் உற்ற துணையாக இருந்தது. சுரங்கத்தொழிலாளர்கள் டேவிக்குத் தங்கள் நன்றியறிதலைத் தெரிவித்தற் பொருட்டு அவ்விளக்கிற்கு அவரது பெயரையே சூட்டினர். அஃது இற்றைக்கும் டேவி விளக்கு (Davy's Safety Lamp) என்னும் பெயராலேயே வழங்கிவருகின்றது. டேவி இதனால் திரண்ட பொருள் சம்பாதித்திருக்கலாம். ஆயினும் டேவி ஏனைய பெருமக்களைப்போன்றே "கைம்மாறு வேண்டா கடப்பாடு" உடையவராகலின் தமது அரிய ஆராய்ச்சியின் பயனை உலகத்திற்கே அளித்துவிட்டார்.

மைக்கேல் பேரடே (Michael Faraday) என்னும் ஓர் அறிவியற் புலவரைத் தமக்கு உதவியாளராக டேவி அமர்த்தி இருந்தார். ஒருநாள் நைட்ரஜன் குளோரைட்

(Chloride of Nitrogen) என்னும் ஒரு புதிய பொருளை ஆராய்ந்து பார்க்கையில் அதுவெடித்துப் பெரியஅதிர்ச்சியை உண்டாக்கிற்று. இருவரும் தங்கள் நல்வினைப் பயனால் உயிர் தப்பிப் பிழைத்தனர். இவர்களது அரிய ஆராய்ச்சிகளின் பயனாகச் சாயம் காய்ச்சுவதற்கு இன்றியமையாதனவாகிய ஹைட்ரோ கார்பன் (Hydrocarbon), பென்சால் (Benzol) முதலியன புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டன. டேவி நைட்ரஸ் ஆக்சைட் (Nitrous Oxide) என்னும் ஒரு வளியைக் கண்டு பிடித்தார். இவ்வளியை மக்கள் உட்கொண்டால் முதலில் சிரிப்பும் கொந்தளிப்பும் ஏற்பட்டுப் பின்னர் மயக்கம் உண்டாகும். இதனாலேயே அதற்குச் "சிரிப்புவளி" (Laughing gas) எனப் பெயர் உண்டாயிற்று. இது குளோரோபாம் (Chloroform) போன்று இரண மருத்துவத்தில் மயக்கம் மருந்தாகப் பயன்படுகிறது.

டேவி 1829-ஆம் ஆண்டு மேத்திங்களில் தமது 51-ஆவது அகவையில் இம்மண்ணுலகை விட்டு மறைந்தார். ஆயினும் இவர்தம் புகழ் இவரது மின்சார விளக்கைப்போன்று இன்றும் சுடர்விட்டு மிளிர்கின்றது.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

இவர் தமது 19-ஆம் ஆண்டிலேயே "ஒளி"யின் தன்மைகளையும் "வெப்ப"த்தின் (Heat) மாறுபாடுகளையும் ஆராய்ந்தறிந்து பல அரிய கட்டுரைகள் எழுதி வெளியிட்டார். இவர் ஆய்வுகள் அனைத்தையும் தம் நண்பர் டாம்கின்ஸ் (Tomkins) என்பவரது வீட்டிலேயே நடத்திவந்தார். சிற்சில வேளைகளில் இவர் வெடிமருந்துகளை ஆராய்ந்து பார்க்கும் பொழுது அவை வெடிப்பதால் மிகப்பெரிய ஓசைகளும் வெடிகளும் உண்டாயின. டாம்கின்ஸ் தம் வீட்டிலுள்ளார் யாவர்க்கும் வெடிமருந்துகளால் தீங்குநேரிடுமென அஞ்சி நடுங்கினார். டேவி தமது காலத்தைப் பயனற்ற ஆராய்ச்சிகளிற் கழிப்பதாக டாம்கின்ஸ் அவரைக் குறைகூறியதுமன்றி, அவற்றை உடனே நிறுத்திவிடும்படியும் வற்புறுத்திக் கூறினார். ஆயினும் டேவி தாம் மேற்கொண்ட காரியத்திலேயே கண்ணுங்கருத்துமாய் இருந்தார்.

டேவி "மக்னிஷியம்" (Magnesium) என்னும் ஒரு புதிய பொருளைக் கண்டுபிடித்தார். அதைச் சூடேற்றினால் அது வெண்மையான ஒளியுடன் சுடர்விட்டு எரிவதைக் காணலாம். இரவில் புகைப்படம் எடுப்பதற்கு இது மிகவும்

பயன்படுகிறது. சுரங்கங்களிலும் வெளிச்சமில்லாத ஏனைய இடங்களிலும் படம்பிடிக்க இஃது உதவுகிறது.

இவையுமன்றி வெடிமருந்து (வாணம்) செய்வதற்கு உதவும் ஸ்ட்ரான்ஷியமும் (Strontium) சாயம் வெளுப்ப தற்குப் பயன்படும் "க்ளோரீனும்" (Chlorine), மருந்து செய்வதற்கு இன்றியமையாததான "அயோடீனும்" (Iodine) இவரால் கண்டுபிடிக்கப்பட்டன.

---

## வள்ளல் நள்ளி

[வித்துவான் இ. சிவகுருநாதன் அவர்கள்]

தமிழ்நாட்டின்கண் வள்ளல் பலர் வாழ்ந்து வந்தனர். அவருள் சிறந்தோர், முதலெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் எனப்படுவோராவர். கடையெழு வள்ளல்களுள் ஒருவன் நள்ளி.

வண்மையிற் சிறந்த தண்ணளியோரின் தன்மை என்னே? இரப்பவர் உவப்புற இன்முக மலர்ந்து நன்மொழிகூறி, வரையாது கொடுத்தலும்; இடம்படு ஞாலம் வியக்க உடல்பொருள் ஆவி அனைத்தையும் இரப்பவர்க்கு உவந்தளித்தலும் வள்ளல்களின் இயற்கையாம்.

சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய பாரியும், மடத்தகை மாமயில் பனிக்குமென்றஞ்சி, பொற்போர்வை ஈந்த பேகனும் செந்தமிழ் நாட்டு வள்ளல்களல்லரோ! அவ்வள்ளல்கள் வாழ்ந்த தமிழகம் இன்று எந்நிலையிலுள்ளது? தமிழன்னாய்! பாரி வண்மையும், பேகன் இரக்கமும் என்று நின்மக்கட்கு வாய்க்கும்?

வள்ளல்களின் வரலாறுகள் பற்பல அறிஞர்களால் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஈண்டு யான் நள்ளியின் வரலாற்றை நவில்கின்றேன்.

வள்ளல் நள்ளி வாழ்ந்த இடம் தோட்டி மலையாகும். அம்மலை அளக்கலாகா அளவும், பொருளுமுடையது; துளக்கலாகா நிலையுந் தோற்றமும் கொண்டது; வான்போலகன்று விளங்குவது; வான்கண் மீன்போன்று சின்னஞ்சிறிய பன்னருஞ் சுனைகளைத் தாங்கியது; பளிங்கெனத் தெளிந்த அருவி இடையறுதோடும் இயல்பினது. நன்மரஞ் செறிந்த நறுந்தண் சாரலினது.

இத்தகைய மலையும், மலைநாடும் நள்ளியின் ஆட்சியில் இருந்து வந்தன. நள்ளி தன்னுயிரென மன்னுயிரையும் புரந்து வந்தான். காட்டுவாழ் விலங்குகளால் நாட்டு மக்கட்கு இடையூறு நேரிடுமென எண்ணி வேட்டையாடுவது நள்ளியின் வழக்கம். நல்லிசைப்புலவர் நட்பும், வில்வாட் பயிற்சிவன்மையும் விளங்கப்பெற்ற நள்ளி, ஒருநாள் வேட்டையாட விழைந்து காட்டை நோக்கிச் சென்ருன்.

ஆண்டு, வறுமையால் வதங்கி, பசியால் வாடி, பலாமரத்தடியில் வருந்தியிருந்த வன்பரணரெனும், நன்புலவர் ஒருவரைக் கண்டான். கண்டவன் கடிதின் புலவர் இருக்கை நண்ணினன். புலவரின் இலம்பாடு கண்டு உள்ளங்குழைந்து உருகினன். வருந்தியிருந்த புலவரும் வள்ளல் வருகையைக் கண்ணுற்ருர். வள்ளல், வில்லும் வாளும் ஏந்தியகையினனுய், கழல்யாத்த காலினனுய், கதிர்விடு திருமணி கட்டிய கொண்டையனுய், முத்துமாலை யணிந்த மார்பினனுய் விளங்கக் கண்டார். கண்ட புலவரும் இரு கையையும் எடுத்துவணங்கி எதிர்வரவேற்ருர் வள்ளல் நள்ளியும், புலவரை வணங்கினன். தன்னை வணங்கிய புலவர் கையைத் தாழ்த்தி, இனிய இருக்கையளித்து அமரச்செய்தான். பின்னை, வாடிய புலவரின் பசிபோக்க முயன்ருன்.

அருளுடை நள்ளி தன் ஏவலாளரது வருகையையும் எதிர் நோக்காது, தானே திரிந்து, தக்க உணவை ஆக்கிப் புலவரை உண்பித்தான். புலவரும் ஒக்கலுடன் உண்டு உவப்புற்ருர். வள்ளல் நள்ளி “இப்புலவர்க்கு யான் விருந்தளிக்கப் பெற்ற பெருந்தவம் என்னையோ!” என எண்ணி இன்புற்ருன்.

நள்ளியளித்த உணவை, அமிழ்தின் மிசைந்து காய் பசி நீங்கிய புலவர், வேறிடஞ்செல்ல விழைந்தார். விழைந்தவர், வள்ளல் நள்ளியிடம் விடைபெற நண்ணினர். விருந்தளித்த நள்ளி, புலவரை நோக்கி, “அன்புடைப்புலவீர்! யான் காட்டு நாட்டினன். என்னிடம் முத்துமாலை யன்றி வேறு நன்கலன் இல்லை. என் மார்பிலணியும் முத்து மாலையைப் பெற்று மகிழ்க!” என்றுகூறி, தன் மார்பிலணிந்திருந்த மாலையையும், கையிற் கட்டியிருந்த கடகத்தையும் புலவருக்கு உவந்தளித்தான்.

பரிசில் பெற்ற புலவருக்குத் தனக்கு நன்மைசெய்த நள்ளியை இன்னுரெனத் தெரியவில்லை, ஆதலின் புலவர் பெருமான் நள்ளியை நோக்கி, “நிழல் அற்ற நீளிடையில்

தழைத்து வளர்ந்த தனிமரம்போல இம்மரஞ் செறிந்த காட்டில் எம்மை மகிழ்ந்து போற்றிய நும் நாடு யாது? நீவிர் யாவீர்?'' என வினவினர்.

வினவிய புலவருக்கு நள்ளி விடையளித்திலன். பிறர் துன்பம் துடைத்தலையே பெருங் குறிக்கோளாகக்கொண்ட நள்ளி தன் நாடும் பெயரும் நவில்வான் கொல்? வாளா இருந்தனன். பின்னைப் பிறரால் அவன் "நள்ளி" என்பதைக் கேள்வியுற்று நனி மகிழ்வெய்தினர்.

என்னே! நள்ளியின் வள்ளன்மை. புலவர் இடும்பை கருதி ஈந்த வள்ளல் நாடும் பெயரும் நவில ஒருப்படுவனோ? வள்ளல்கள் 'தம் பெயர் விளங்க'க் கொடுத்தலைக் கனவிலும் கண்டறியார். உயிர்களின் துயர்போக்கும் ஒன்றையே எண்ணி ஈந்துவப்பார்கள். அவ்வள்ளல்களல்லவோ வள்ளல்கள்! அவர்கள் புகழல்லவோ என்றும் நின்று நிலவும்!

தமிழ்ச் செல்வர்காள்! நள்ளியின் வள்ளன்மையை வன்பரணர் பலவாறு புகழ்ந்து போற்றுகின்றார். அவற்றுள் ஒரு சிலவற்றை உரைக்குவல:

"......பெறுதற்கரிய வீறுசால் நன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டு நாட்டேமென
மார்பிற் பூண்ட வயங்கு காழாரம்
அடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்.
எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீரோ வெனப் பெயருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிகேட் டிசினே
........................................................
நளிமலை நாடன் நள்ளிய வனெனவே

—(புறம்-150.)

இப்பா நள்ளியின் வள்ளன்மையை நன்கு விளக்குகின்றதல்லவா? ஏனையதொரு பாவால் அவன் கொடைமிகுதியைக் கூறுவார் தன்னியற்கையையும் எடுத்துரைக்கின்றார். என்னை?

"கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளி
...............பரிசின் முற்றளிப்ப
பீடின் மன்னர் புகழ்ச்சி வேண்டி
செய்யா கூறி கிளத்தல்
எய்யா தாகின்று எஞ்சிறு செந்நாவே"

—(புற-144.)

பண்டைப்புலவர் பெருமக்கள் ஒருவர் செய்யாதவற்றைச் செய்வதாகக்கூறும் இயல்பினரல்லர் என்பதை இப்பா இனிது உணர்த்துதலை ஊன்றி நோக்குமின்!

இத்தகைய வள்ளல்களும் புலவர்களும், தமிழ்நாட்டின் மீண்டும் பிறத்தல் என்றோ! தமிழன்னாய்! அருள்பாலிப்பாயாக!

---

## விசயராகவ நாயக்கர் (கி. பி. 1644—1673)

[திருவாளர் வித்துவான் கி. சாமிக்கண்ணு அவர்கள்]

தோற்றுவாய் :—விசயராகவ நாயக்கர், இந்த நாயக்க அரசவழியின் நாலாவது அரசர். இவர் இரகுநாத நாயக்கருக்குக் குமாரர். இவருக்கு அச்சுத நாயக்கர், அச்சுத விசயராகவ நாயக்கர் என்ற மறுபெயர்கள் வழங்கிவந்தன. இவருடைய மகன் பெயர் மன்னாரப்ப நாயக்கர். இவருக்கு ஒரு பெண்ணும் உண்டு.

வரலாறு :—விசயராகவ நாயக்கர் கி. பி. 1669-ல் டச்சுக்காரருக்கு நாகபட்டினத்தை இனாம் செய்தார். அந்த இனாம் சாசனப்பட்டயம் வெள்ளித்தகடுகளில் வரையப்பட்டு இப்பொழுது பட்டேவியா என்னும் ஊரிலுள்ள பொருட்காட்சி சாலையில் இருக்கிறது.

விசயராகவ நாயக்கருடைய அரசாட்சியின் கடைசிக் காலத்தில், மதுரையில் அரசு செலுத்திவந்த சொக்கநாத நாயக்கர், சிராப்பள்ளியைத் தலைநகராக்கி அவ்விடத்திலேயே குடியிருந்தார். அவ்விடத்தி லிருந்துகொண்டு தஞ்சாவூரைக் கைப்பற்ற வேண்டுமென்று அதன்மேல் கண்ணாயிருந்தார். அவ்வாறிருக்கையில், சொக்கநாத நாயக்கர், விசயராகவ நாயக்கருடைய அருமைச் செல்வியைத் தமக்கு மணம் செய்து கொடுக்கும்படி தஞ்சாவூருக்குத் தூதுவிடுத்தார். அச்சம்பந்தம் ஏலாதென்று நினைத்து அதற்கு விசயராகவ நாயக்கர் மனங்கொள்ளவில்லை. அதையே ஒரு காரணமாகப் பாராட்டி, சொக்கநாத நாயக்கர் தமது தளவாய் வேங்கடகிருஷ்ணப்ப நாயக்கரின்கீழ் ஒரு படையெடுப்புத் தயார் செய்து தஞ்சாவூரின்மீது அனுப்பினார். தளவாய் வேங்கடகிருஷ்ணப்ப நாயக்கருக்கு உதவியாகச் சொக்கநாத நாயக்கர் தம்முடைய செவிலித்தாயின் மகனான அளகிரியையும் அனுப்பினார். சிராப்பள்ளியிலிருந்து அனுப்பப்பட்ட சேனைத்தலை

வர்கள் திடீரென்று படையெடுத்துச்சென்று கி. பி. 1673-ல் தஞ்சாவூரைத்தாக்கினார்கள். தஞ்சாவூர்ச்சேனைகள் உறுதியுற நின்று சண்டைசெய்து கடைசியாய்த் தோல்வியடைந்தன. தளவாய் அரங்கப்ப நாயக்கர், தளவாய் சொக்கநாதவீரபானு, தளவாய் சின்னராசா, தளவாய் அக்கிராசா முதலியவர்களும் போர்புரிந்து உயிரிழந்தார்கள். ஒன்னார் கோட்டைக்குள் நுழைந்துவிட்டார்கள் என்ற செய்தி காதுக்கெட்டவே, விசயராகவ நாயக்கர் தமது மகன் மன்னாரப்ப நாயக்கருடன் கையும் கத்தியுமாய்ப் போர்க்களத்தில் குதித்துப் பகைவர்களுடன் அமராற்றி அவர்களில் அநேகரை வெட்டிக் கண்ட துண்டமாக்கிக் கடைசியாய் மாற்றாரின் வாளுக்கு இரையானார். அவருடன் அவருடைய குமாரர் மன்னாரப்ப நாயக்கரும் சண்டையில் மடிந்தார். இச்சண்டை தஞ்சாவூர் வடக்குக் கோட்டை வாசலுக்கடுத்த இராசகோபாலசாமி கோவில் வாசலில் நடந்தது.

தமக்குப் பிறகு தமது பெண்டு பிள்ளைகள் எதிரிகளால் எவ்விதமான அவமானத்திற்கும் உள்ளாகக் கூடாதென்பது விசயராகவ நாயக்கரது கருத்து. மேலும் தமக்குப் பிற்காலத்திலுங்கூடத் தமது மகள் சொக்கநாத நாயக்கருக்கு மனைவியாகக் கூடாதென்பது அவருடைய எண்ணம். ஆகையால் அவர் போர்க்களத்திற் புகுவதற்கு முன், தமது அந்தப்புரத்திலுள்ள மாதர்களையெல்லாம் அரண்மனையில் ஒரு அறையில் ஒன்றுசேர்த்து வைத்தார். தாமும் தமது மகனும் சண்டையில் உயிரிழப்பதைவிடத் தங்களுக்கு வேறு வகையில்லையென்று கண்டால் உடனே ஒரு அடையாளம் காட்டுவதாகச் சொல்லியிருந்தார். அப்பொழுது அவ்வறையிலிருப்பவர்களையெல்லாம் நெருப்பு வைத்துக் கொளுத்திவிடும்படியாக ஏற்பாடு செய்திருந்தார். அம்மாதர்கள் கத்திகளை உருவிக் கைகளில் பிடித்துக்கொண்டு அவ்வறையில் அரசனது கட்டளையை எதிர்பார்த்து நின்றார்கள். சற்று நேரத்திற்குள் போர்க்களத்திலிருந்து கொற்றவனுடைய ஆணையும் வந்துவிட்டது அவர்கள் ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டு தங்களுயிரை மாய்த்துக்கொண்டார்கள். அவர்களிருந்த கட்டிடமானது வெடிமருந்திட்டு நெருப்பு வைத்துக்கொளுத்தப்பட்டது. அங்கிருந்த மாதுசிரோமணிகள் யாவரும் தீவாய்ப்பட்டு நீறாயினர்.

இக்குழப்பங்கள் நடந்த காலத்தில் விசயராகவ நாயக்கருடைய குமாரர் மன்னாரப்ப நாயக்கருக்கு இளவயதுள்ள செங்கமலதாசு என்ற ஓர் ஆண்குழந்தை இருந்தது. அக்

குழந்தையின் தாய், தன் அருமைக் குழந்தையையும் அருமையான நகைகளையும் தனக்கு அந்தரங்கமாயிருந்த ஒரு தாதியின் கையில் ஒப்பித்துக் குழந்தையைக் கேளாருடைய கண்ணுக் கெட்டாத தூரமான இடத்திற் கொண்டுபோய் வளர்க்கும்படி சொன்னாள். அந்தத் தாதி குழந்தையை எடுத்துக் கொண்டு நாகபட்டினம் போய்ச் சேர்ந்து யாரும் அறியாமல் ஒரு செட்டிவீட்டில் அந்தக் குழந்தையை வளர்த்துவந்தாள். அக்குழந்தை பன்னிரண்டு வயதுவரையில் அங்கேயே வளர்ந்து வந்தது.

காலம்:—விசயராகவ நாயக்கர் அரசுகட்டில் ஏறியகாலம் கி. பி. 1644-ஆம்ஆண்டு. கி. பி. 1673ல் போர்க்களத்தில் உயிர் நீத்தார். இவர் இருபத்தொன்பது ஆண்டுகள் இடையீடின்றி அரசு செலுத்தியவர்.

நாட்டினளவு :—இராமசேது முதல் பழமலை வரையிலும், குணகடல் முதல் சிராப்பள்ளி வரையிலும் பரந்துள்ள இடங்கள் இவரது ஆட்சியி லடங்கியிருந்தன.

முடிவுரை :—இவர் தெய்வ நம்பிக்கை நிறைந்தவர். அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண்டகை. மானமிழந்தபின் வாழாமை முன்னினிதென்ற சீரிய கொள்கையினர். நாட்டை அமைதியுடன் ஆண்டவர். வெளிநாட்டினின்றும் தம் நாடு போந்த வணிகர்களுக்கு உதவிசெய்தவர். தாராள மனப்பாங்குடையவர். தன்னாட்டுக் குடிகளால் பெரிதும் நேசிக்கப் பட்டவர்.

---

## மிகவும் பழைய துப்பாக்கி

வெடிகருவிகளில் மிகவும் பழையதாகக் கருதப்படுவது சீனநாட்டுக் கைத்துப்பாக்கி யொன்றாகும். அஃது 1377-ல், அதாவது ஏறக்குறைய 500 ஆண்டுகட்குமுன் செய்யப்பட்டதாகும். இப்பொழுது அது பெர்லின் நகரப் போர்க்கருவிக் கண்காட்சிச்சாலையில் வைக்கப்பட்டுள்ளது.

---

# அறிவியற் பகுதி - Science

## தமிழ் எழுத்துக்களின் நுண்மை விளக்கம்

திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்-. க. ப. சந்தோஷம் B.A., L.T.

[முன் சஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி]

உண்மை இயலை எழுத்தாற்காட்டும் முறையில் தமிழ் எழுத்துக்கள் ஐந்து பகுதிகளாய்ப் பிரிகின்றன. ஒற்றெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினம் என வகுக்கப்பட்டு, பிருதிவி, அப்பு, தேயு என்ற பூதங்களையும்; உயிரெழுத்துக்கள் வாயு என்ற பூதத்தையும்; தனித்தமிழ் எழுத்தாகிய ஆய்தம், ஆகாயத்தையும் குறிக்கின்றன. ஆதலின் இவற்றைப் பஞ்சபூத எழுத்துக்களென்று கூறலாம். பஞ்சபூதங்கள் ஒன்றோடொன்று கலந்து நாமறியக்கூடிய பருப்பொருள்களனைத்தையுந் தோற்றுவிக்குமாறு, தமிழ் ஒலி இயலில் அடங்கிய பஞ்சபூத எழுத்துக்களைச் செவ்வனம் கூட்டுவதால் எம்மொழியினுந் தோன்றக்கூடிய எல்லா ஒலிகளையும் உண்டாக்கலாம். இங்ஙனம் யான் கூறுதல் கொண்டு, தமிழ் எழுத்துக்கள் தோற்றுவிக்கக்கூடிய ஒலிகளெல்லாம் தமிழ்மொழியில் வழங்குகின்றனவென்று நினைத்தல் கூடாது. மக்கள் எழுப்பக்கூடிய எல்லா ஒலிகளுக்குந் தமிழில் எழுத்துக்கள் உளவேனும், இவண் விரித்துரைக்கவியலாத சில காரணங்களால் சில ஒலிகளையே தமிழர் பொது வழக்கில் ஆண்டுவந்தனர். இவற்றைத் தவறாக உச்சரிக்கும் முறையைச் சரியென்று பதிவு செய்வதால், அறிவியலுக்கிசைந்த தமிழ் ஒலியியலின் பயன் அழியும்.

பொது அறிவைத் தழுவி மொழியை ஆராயப்புகுவோர்க்கித்துறையில் தங்கள் ஆராய்ச்சிக்குப் பயன் படக்கூடிய தொன்றுங் கிட்டிலது. ஏனெனில், தமிழ் ஒலிகளைப்பற்றி யாண்டுங் கல்வெட்டுகளிற் குறிப்பிடப்படவில்லை. இலக்கணங்களில்தான் தமிழ்மொழிகள் வரையறுத்துக் கூறப்பட்டிருக்கிறன.

எழுத்துக்களின் வடிவங்களை இப்பொழுது கருதுவோம். உண்மை இயலை நன்கறிதற்கு எழுத்துக்களின் ஒலியைப் போலவே வடிவமும் பெரிதும் வேண்டப்படுவதாம். பல சித்திகள் கைகூடுமென்ற கருத்தால் மந்திர சக்கரங்களும், குளிசங்களும் இன்றும் வழக்கிலிருக்கின்றன. இவற்றில் பல எழுத்துக்களின் வடிவங்கள் ஒன்றாகச் சேர்க்கப்படு

கின்றன. இவ்வெழுத்துக்களில் ஒன்று சிதைபடுமாயின், அல்லது மாற்றப்படுமாயின், அதனால் எவர்பொருட்டு மந்திரம் உருச்செய்யப்படுகின்றதோ, அவருக்குத் தீமையோ நன்மையோ விளையலாமென்று நம்பப்படுகின்றது. சில சக்கரங்களில் ஒரு பெரிய எழுத்து நடுவிற் பொறிக்கப்பட்டு அத னுள்ளும்புறமும் சில சிறு எழுத்துக்கள் அமைக்கப்படுகின்றன. இவற்றை நோக்குங்கால், மந்திரங்கள் வழங்கிய காலத்தில் எழுத்துக்களுக்கு வரையறுக்கப்பட்ட வடிவங்களிருந்தனவென்றும், ஒவ்வொரு வடிவமும் சில கருத்துக்களைத் தன்பால் அடக்கிக்கொண்டிருந்ததென்று மறியலாம்.

தமிழ் எழுத்துக்களின் ஒலியை மிகத்தெளிவாக எடுத்துரைக்கின்ற இலக்கணங்கள் அவற்றின் வடிவத்தை அவ்வளவு தெளிவாகக் காட்டில. இதுகொண்டு, அவ்விலக்கணங்களெழுதப்பட்ட காலங்களில் மொழி எழுதப்படவில்லை என்ற முடிபிற்கு வரக்கூடாது. தொல்காப்பியத்தில் எழுத்தின் வடிவங்களைக் குறிக்கும் சிலவிதிகளுள.

"ஆய்தமென்ற முப்பாற் புள்ளியுமெழுத்தோரன்ன"
"மெய்யினியல்பு புள்ளியொடு நிலையல்"
"எகரஒகரத் தியற்கையு மற்றே"
"உட்பெறு புள்ளி யுருவா கும்மே"
"புள்ளியில்லா வெல்லா மெய்யும்"
"வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே."

இவற்றால் தொல்காப்பிய காலத்திற்கும் அதற்கு முந்தியும் எழுத்து வழக்கிலிருந்தனவென்பது வெளிப்படுகிறது. தொல்காப்பிய காலம் கி. மு. நாலாவது நூற்றாண்டுக்கு முற்பட்டதென்று துணிந்துகூற ஏதுக்களுண்டு. இஃது அசோகனுடைய காலத்திற்கு முற்பட்டதாகுமென்பதைக் கருத்தில் வைக்க.

தொல்காப்பிய முதற் சூத்திரத்தின் முதற்சொல் எழுத்தென்பதாகும். தமிழ்மொழியில் ஒலி என்ற கருத்தைக் கொண்டு எழுத்துக்கு இடப்பட்ட பெயரொன்றுமில்லை. பொறி, வரி என்று இரு கிளவிகளே எழுத்தென்பதற்கு மறுபெயர்களாகும். ஆனால், 'சொல்' என்ற கருத்தை வெளியிட 31 கிளவிகளுள இவையாவும் ஒலி என்ற அடிப்பொருளுடையனவாம்:—

அசைப்பு, அறை, இசை, இசைப்பு, இயம், உரை, கரை, கிளவி, குயில், கூற்று, செப்பு, தோல், தோற்றம், நுவற்சி, நொடி, பகர்ச்சி, பணி, பயில், பறை, பனுவல், பாணி, புகல், புகறல், பேச்சு, மறை, மாற்றம், மொழி, வாய்மை, விளம்பு, வினு.

சொல், எழுத்து என்ற இரு கிளவிகளினால் குறிக்கப்படுகின்ற பொருள்களை உற்று நோக்கின், எவரும் மறுக்கமுடியாத ஓருண்மை வெளியாகும் :—எழுத்தென்ற கிளவி வழக்கில் வருவதற்கு மிகமிக முன்னரே, சொல்லென்றகிளவி வழங்கியிருத்தல் வேண்டும். அற்றாயின், எழுத்தென்கிளவி வழக்கில் வந்த காலத்தில் தமிழர் மிக வியக்கத்தக்கதொரு நாகரிகம் எய்தியிருத்தல்வேண்டும். சொல்லென் கிளவியின் பொருள்களாவன:—

[1]வார்த்தை, [2]குறியீடு, [3]சொற்றொடர், [4]வாக்கியம், [5]பல வாக்கியங்களாலமைந்த ஒரு பகுதி, [6]பிரகடனம், [7]பொருப்பு மொழி, [8]கட்டளை, [9]அனுபவத்திற்கண்ட உண்மை, [10]ஐயமகற்றல், [11]போற்றுதல், [12]நெல், [13]கள். இஃதிங்ஙனமாக எழுத்தென்ற சொல்லால் குறிக்கப்படும் பொருள்களாவன;-

[1]நெடுங்கணக்கு, [2]வரைதல், [3]எழுதப்பட்ட கடிதம், [4]எழுதிய ஒரு குறிப்பு, [5]புள்ளியிடுதல், [6]எழுதிய கணக்கு, [7]எழுதிய ஒப்பந்தம், [8]ஆவணம், [9]தஸ்தாவேஜு, [10] பெயரெழுதுதல், [11] பதிவுசெய்தல், [12] வருணித்தல், [13] பொறித்தல், [14] ஓவியம், [15]இலக்கியம், [16] அறிவியல், [17]மந்திர எழுத்துக்கள், [18]சக்கரங்களிலும் குளிசங்களிலுமுள்ள எழுத்துக்கள், [19]தலையெழுத்து. இவற்றுட் பல வழக்கற்றன.

எழுத்தென்ற சொல்லின் வழக்குத் தொல்காப்பிய காலத்துக்கு மிக முந்தியதென்பதை மறுக்கொணாது. எனெனின், தொல்காப்பியம் எழுத்தென்ற சொல்லை வழங்குகின்றது. தொல்காப்பிய காலம் கி. மு. நாலாம் நூற்றாண்டுக்கு முன்னாகும். ஆதலின், அக்காலத்திற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னரே தமிழர்கள் மிக மேலான நாகரிகமடைந்திருத்தல் வேண்டும்.

தொல்காப்பியத்திற்கு முந்திய இலக்கியங்கள் நமக்குக் கிடைக்கப்பெறாமையின், தொல்காப்பியத்தின் வாயிலாகவே தமிழர் கண்ட பேருண்மைகளை நாமறியவேண்டியதாயிருக்கிறது. தொல்காப்பிய வாயிலாய் காணக்கிடக்கின்ற இவ்வுண்மைகள், முன்னாளிலிருந்த ஒழுங்குபட்ட அறிவையும், தமிழ்மொழியின் மறைப்பகுதியை அறியவேண்டிய முறையையும் நமக்கு நன்கு விளக்குகின்றன. மறைத்தன்மையே தமிழின் அடிப்படையாகுமென்பதைத் தெற்றெனக் காண்கின்றோம். மறைத்தன்மை என்பதை நாமுற்றுநோக்கிப் படிப்படியாய் அதை அறியத் தொடங்கும்பொழுது மறை என்ற சொல்லாற் குறிக்கப்படுகின்ற திரைநீங்கி அது நுண்ணிய இயற்கை முறைகளைக் குறிக்கும் என்பது வெளியாகும்.

உண்மை இயலை அடிப்படையாகக்கொண்டே தமிழ் மொழியுந் தமிழ் இலக்கணமும் வந்தன.

பண்டை இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தைச் சிறிதேனுங் கற்றவர் அதில் வழங்கப்படும் இலக்கணக் குறியீடுகள் உயிரைப்பற்றிய உண்மைகளை வெளியிடுவதற்கு வேண்டிய குறியீடுகளாமென்பதை எளிதிலறிவர். இலக்கணத்திற் கூறப்படும் எழுத்து, சொல், வாக்கியம் என்பவற்றிற்குப் பதிலாக உண்மை இயலில் இவற்றிற் கொத்திருப்பவற்றைப் புகுத்துவோமாயின் தொல்காப்பியத்திற் கூறப்பட்ட விதிகள் மொழியிலக்கணத்திற்குப் பதிலாய் உயிரிலக்கணத்தை விரிக்கின்றனவென்பது தெளிவாம். பின்வருவன கொண் டிதையறியலாம்:—

தாமே இயங்கும் ஆற்றலுடைய எழுத்துக்கள் தமிழில் உயிர் அல்லது ஆவி என்று கூறப்படுகின்றன. உயிர், ஆவி என்பன ஜீவாத்மாவைக் குறிக்கும். உயிரோடு கலந்தாலன்றித் தாமே இயங்கலாற்றாத எழுத்துக்கள் உடல் அல்லது மெய் என்று பெயர் பெறுகின்றன. உடல், மெய் என்பன திரிமலகோசம் அல்லது ஜடத்தைக் குறிக்கும். தானே இயங்கும் எழுத்தும், இயங்கலாற்றாவெழுத்தும்கூடிப்பிறக்குமொலியைக் குறிக்குமெழுத்தும், உயிர்மெய்யென்று பெயர் பெறுகின்றது. உயிர் மெய்யென்பது உடம்பில் உயிர் அடைபட்ட நிலையைக் குறிக்கும். இது திரிமல கோசத்தில் ஜீவாத்மா இயங்குவதாகும். திண்ணிய ஓசையையுடைய எழுத்துக்கள் வல்லின மெய்யெனப்பட்டுத் தானென்ற அகங்காரத்தின் உருவத்தைக் குறிக்கும். இஃது ஆணவமல கோசமாகும். திண்மை மென்மையாகிய இரண்டிற்குமிடையேயுள்ள ஓசை நிலையைக் குறிக்குமெழுத்துக்கள் இடையினமெனப் பெயர்கொண்டு, மயக்கத்தைக் குறிக்கும். இது மாயாமல கோசமாகும். மென்மைத் தன்மையவாய ஓசையைக் குறிக்குமெழுத்துக்கள் மெல்லினமெனக் குறிக்கப்பெற்று, உயிரைப் பல்வகையில் ஈர்க்கும் அவாக்களைக் குறிக்கும். இது காமியமல கோசமாகும்.

ஒற்றெழுத்துக்கள் ஒன்றேடொன்று கூடுவதைக் கூறுமதிகாரம் புள்ளி மயங்கியல் அல்லது மெய்மயங்கியல் எனத் தலைப்புப் பெற்று உடம்பு அல்லது திரிமல கோசத்தின் மயங்குவதை விளக்கும். (மயக்கம்=மாயை)

உயிர்கள் ஒன்றேடொன்று கூடுமியல்பை விரிக்கின்ற அதிகாரம் உயிர்மயங்கியல் என்று பெயர்பெற்று உயிருக்கு நேரும் மயக்கத்தை விளக்கும்.

எழுத்துக்களின் ஒலியை வரையறுக்கின்ற அதிகாரம் பிறப்பியல் என நின்று பிறப்பின் முறையைக் காட்டும். பிறப்பென்பது ஜனனம், ஜன்மம்.

(தொடரும்

# செய்திகளும் குறிப்புகளும் :
# News and Notes

## "செந்தமிழ்ச் செல்வி" இரட்டைமணிமாலை

[யாழ்ப்பாணத்து நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர்]

### (புதுக்கவி)

### காப்பு

**வெண்பா**

அணிமாலை பாவா லணிவாட் கிரட்டை
மணிமாலை நாவால் வழங்கப்—பிணிமாலை
ஒட்டுமிரு கோட்டம் பிறையிதழி யோங்குசடை
காட்டுமொரு கோட்டனடி காப்பு.

### நூல்

**வெண்பா**

வெண்டா மரைமேல் விளையுந் தமிழ்ச்செழுந்தேன்
கண்டா லினிக்குமிரு கட்கரும்பு—கொண்டார்க்கு
வஞ்சத் திருக்கு மறுத்தொழியா வாழ்வுதவி
நெஞ்சத் திருக்கு நிறைந்து.

**கலித்துறை**

நிறைவாண் மலர்முக மும்பஉணத் தோளு நிலவினொளி
குறைவா ணகையு மிருட்குழற் காடுங் கொடியிடையும்
அறைவா னமுத மொழியு மரவிந்தத் தாள்களுமாய்
உறைவா ளுரைமகள் வெண்கம லத்துமென் னுள்ளத்துமே.

**வெண்பா**

உள்ளத்தா லுள்ள வமுதூறித் தித்தித்தென்
கள்ளத்தை நீக்கியின்பங் காட்டுமே—வெள்ளைக்
கலையு மணியுமணி காமரன மென்போற்
றலையு மணியு மணித் தாள்.

கலித்துறை

தாடலை வைத்தவெண் டாமரை மேவித் தனதருட்சித்
தாடலை வைத்தம் புவியா ளரசி யளிகள்சுவைத்
தாடலை வைத்த குழலாளென் னன்னை தன்னம்புயப்பொற்
றாடலை வைத்தெனை யாண்டா ளழிந்தன சஞ்சலமே.

வெண்பா

சஞ்சலம்போ மின்பந் தழைக்குந் தருமனையும்
அஞ்சலம் போய்வாவென் றதட்டலாம்—வஞ்சகர்செய்
தந்திரமோ தாதுகலை வாணிதமிழ் மூன்றெழுத்து
மந்திர மோதி வரின்.

கலித்துறை

வரிக்கோல வாழ்விழி பானலம் போது மதன்கரத்த
வரிக்கோல வாரிதி யீயும் மருந்து மதுரமொழி
வரிக்கோல மாமுலை வாரணக் கோடு மலர்க்கரத்து
வரிக்கோ லமரிசை யாழுடைச் செந்தமிழ் மாமயிற்கே.

வெண்பா

மயிலே மடவனமே வண்டமிழ்ப்பூங் காவிற்
குயிலே மலயமலைக் கொம்பே—மயலேதந்
திர்க்கும் பழைய வினையிரண்டு மின்னினியே
தீர்க்குந் திருவருளைச் செய்.

கலித்துறை

செல்லாத செல்வியைத் தமாரை யாட்டியைத் தீயவர்பால்
நில்லா தமர்ந்தெங்கு நின்றுளை நித்யகல் யாணியை நூல்
கல்லா தவர்மனம் போலிருட் கூந்தற் கனங்குழையை
அல்லா தருளுடைத் தெய்வந் தமிழகத் தார்க்கில்லையே.

வெண்பா

தாய்போ லுணவருளித் தந்தைபோற் கல்விகொடுத்
தாய்வளைபோ லின்ப மகத்துதவிச் சேய்போல்
இளங்குதலைத் தீஞ்சொல் செவிக்கீவா ளென்றும்
வழங்குதலை யுற்றதமிழ் மாது.

### கலித்துறை

மாவாழ் பொதிய மலையிற் பிறந்து வரமுனிவன்
பூவாழ் கரமெனும் பொற்றொட்டி லாடிப் புலவர்சங்கப்
பாவாழ் பலகை யிருந்தேட்டி லேதவழ் பாவையென்றன்
நாவாழ் வுகந்தமை நான்முன்பு செய்திட்ட நற்றவமே.

### வெண்பா

தவந்தரு மோங்குந் தனந்தரு மின்புஞ்
சிவந்தரும் பேரின்புஞ் சேர்க்கும்—நவந்தருமிப்
பூவா மெழுபிறப்பும் நற்றுணையாய்ப் புல்லுமே
பாவாழ் கலைமான் பதம்.

### கலித்துறை

பண்டங்கு தீஞ்சொற் பனுவற் பிராட்டி பவளவிதழ்
விண்டங் கெழுந்த செழுந்தமிழ்க் கங்கை வியனதியிம்
மண்டலங்கி முட்டி நிவந்துவிண் ணோரும் மனமறுகக்
கண்டங் கறுத்த பெருமா னிருசெவிக் கட்டுண்டதே.

### வெண்பா

கடையமுதிற் றென்பொதியக் கல்லிற் பிறந்த
நடையமுத நல்ல வமுதம்—கடையமுதம்
உண்டா லினிக்கு முணர்ந்தாலுங் கேட்டாலுங்
கண்டா லினிக்குமிது காண்.

### கலித்துறை

காவர சங்க மயலும் பிணியுங் கடிந்துகமழ்
பூவர சங்கமர் பொன்னன மேபுக லும்பிடிக்கை
மாவர சங்கனுங் கும்நடை யாய்மணிக் கூடலிலும்
தாவர சங்கம மெங்கு நிறைந்த தமிழ்த் தெய்வமே.

### வெண்பா

தெய்வமுனைப் போல்வேறு தெய்வமிலை நீயுரைக்குஞ்
சைவசம யம்போற் சமயமிலைப்—பொய்யன்று
மாமறையு மாறில் மறையு மறையுமென்றால்
நாமறையு மாறு நகை.

### கலித்துறை

கையது புத்தகம் யாழக்க மாலை கவிரிதழ்ந
கையது முத்தமு முல்லை யரும்புங் கமழுமைவ
கையது பூங்குழல் காலொன் றிரண்டீ கமலநன்மு
கையது கொங்கை கருத்ததென் மேற்கொண்ட காரிகைக்கே

### வெண்பா

காரியமன் மேதிக் கடாவினெதிர்ந் தானுமது
காரியமன் றன்று கடத்தெனும்பைச்—சீரியசம்
பந்தனுயர் பூம்பாவை யாக்கவருள் பாமகள்முன்
தந்தமி ழின்றுமுண்டு தான்.

### கலித்துறை

தாதுறை தாமரை யோபுன லோதரை யோவிரைசேர்
போதுறை சோலைப் பொதியங்கொ லோபுல வோருலகோ
சூதுறை கொங்கைத் துடியிடைச் சுந்தர வல்லியன்ன
மாதுறை கின்ற விடந்தா னறியும் வழியில்லையே.

### வெண்பா

வண்ணப் புனலும் வளியும் நெடுவிசும்பும்
மண்ணுமன லும்மறைந்து நின்றாலும்—எண்ணுமிரு
கண்ணும் மனமுமுருக் காட்டி வெளியாக
நண்ணும் தமிழரசி நன்று.

### கலித்துறை

நங்கைக் கிடந்தரு நாண்மல ரேமுக நாகிளவேய்
அங்கைக் கிடந்தரு தோளா மடியில வந்தளிரே
கொங்கைக் கிடைந்தொல்கு நுண்ணிடைக் கொப்புமை கூறினது
சங்கைக் கிடமிட மேதட மேவுவெண் டாமரையே.

---

# * திருவள்ளுவரும் பெண்களும்

[திருமதி பண்டிதை S. கிருஷ்ணவேணியம்மாள்]

திருவள்ளுவர் பிறப்புச், சமயம் முதலியன இன்னும் பெரியோர் ஆராய்ச்சியில் உழன்றுகொண்டிருக்கும் பெரும் பொருள்களாகும். அன்றியும் தெய்வப்புலவராகிய திருவள்ளுவரின் பெருமிதங்களை நுணுகி ஆய்ந்தறிந்துள்ள தலைவரும், பெரியோர் பலரும் எழுந்தருளியிருக்கும் இவ்வவையின்கண் அற்ப அறிவையுடைய யான் அவர் சீர்மைகளை இயம்பப்புகுவது, கொல்லன் தெருவில் ஊசி விற்பதற்கு ஒப்பேயன்றிப் பிறிதில்லை. ஆயினும் எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ப இரண்டொன்றை இயம்பி மேலே செல்கிறேன்.

திருவள்ளுவர் பொருள்களின் சிறப்புகளையும், பாகுபாடுகளையும் பலரறிய கெம்பீரமாய் எடுத்தியம்புகின்றவர் பலர். ஆனால் தாம் கூறியபடி செயலாற்றுகின்றவரோ மிகச் சிலர். இஃது உலகறிந்த ஓர் இரகசியம். நம் செந்நாப்போதாரோ அவ்வகுப்பைச் சார்ந்தவரல்லர்.

"சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்"

என்னும் தெய்வ வாக்கிலமைந்த அருமை, எளிமையாகுமாறு தம் வாழ்க்கையை நடாத்தியவர். இதற்கு, இல்லறம், துறவறமாகிய இரண்டு அறங்களில் எது சிறந்தது எனத் தம்மை வினவிய பெரியாருக்குத் துறவறத்தைக் காட்டிலும் இல்லறமே சிறந்தது என அப்பெரியார் நன்கு உணருமாறு நம் செந்நாப்போதார் தம் செயன்முறையில் காட்டியதே தக்க சான்றாகும்.

அவர் திருவாக்குப் பாவில் முதன்மைபெற்ற குறள் வெண்பாவில் அமைந்துள்ளது. அதுமாத்திரமேயன்றிப் படிப்போர் மனத்தில் எளிதில் பதியக்கூடிய சிறுமையையும், ஆராய்வோர் அறிவிற்குப் பெருவிருந் தளிக்கக்கூடிய பொருட்செறிவையும் பெற்றிருப்பதை அறிவுடையார் நன்கு அறிவர்.

ஒவ்வொரு மதத்தினரும் இதைத் தம் நூல் என வழக்கிட்டுக் கொண்டிருத்தலே இந்நூலின் பொருளருமையை வெளிப்படுத்தவில்லையா? வேதக்கருத்து முழுதும் இந்நூலில் அமைந்திருத்தலின், கற்றோர் இதைத் தமிழ்வேதம் எனக் கழறுகின்றனர். இத்துணைச் சிறப்புவாய்ந்த இத்தமிழ்

---

* இஃது 1936-ஆம் ஆண்டுத் திருவள்ளுவர் திருநாள் கூட்டத்தில் நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவின் சுருக்கமாகும்.

வேதம் குடிப்புகாத மொழி எது? தேசம் எது? படித்தவர் மனத்திற் படிந்து பயன்தருவது திருக்குறளன்றி வேறு எந்த நூல்? அன்றியும் இம்மை, மறுமை, வீடு ஆகிய மூன் றிற்கும் இன்றியமையாத சிறந்த பொருள்கள் பலவும் இந்நூலின்கண் அமைந்துள்ளனவென்பது அறிவுடையோர் கருத்து. இதைச் செவ்விதின் உணர்ந்த உங்கள் முன்னிலையில் இன்னும் விரித்துக்கூறுதல் வெற்றுரையேயாகும்.

இனிப், பெண்களைப்பற்றி ஆராய்வாம்:-அடக்கம், மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு ஆகிய இக்குணங்கள் பெண் களுக்கு இருத்தல் வேண்டும் என அறநூல்கள் அறையா நிற்கின்றன. இவற்றைப் பெற்றிருப்பவரே பெண்களில் நல் லார் என உலகம் கூறுகின்றது. ஆனால் இக்குணங்கள் மங்கை யர்க்கு இயற்கையா என வினவில் அன்று என்னும் விடை தான் நமக்குக் கிடைக்கும். ஒரு பொருளை விட்டுப் பிரிக்க முடியாத பண்பு எதுவோ அதுதான் இயற்கையாகும். பாகற் காயை விட்டுப் பிரிக்கமுடியாத கசப்பை நோக்குக. எங்ங னம் பாகலுக்குக் கசப்பு இயற்கையாக அமைந்துள்ளதோ, அங்ஙனமே பெண்ணுலகத்திற்கு இயற்கையாக அமைந்த குணங்கள் சில உண்டு.

பெரும்பொருள் ஈட்டுகின்ற ஆடவர் ஒருவர், தம்மேலதி காரி தீயவார்த்தை ஒன்றினால் தம்மைக் கோபித்தவுடன் அதைப் பொறுக்கலாற்றாது உடனே தம்வேலையை விட்டுவிட நினைக்கின்றனர். உத்தியோகத்தை விடுவதால் தமக்கு ஏற் படும் துன்பங்கள் பல அவர் முன் தோன்றினும் அவற்றைக் குறித்துப் பொறுமையுடன் சிந்திக்க அவர் மனம் அப்போது இடந்தருவதில்லை. இதை மனத்தி லிருத்திக்கொண்டு நம் பெண் மகளிரிடம் செல்வாம். நம்மகளிர், கணவர், குடும் பத்தார், குழந்தைகள் முதலியோர் கொடுக்கும் தொல்லை களுக்கு மனம் பதறிக் காரியஞ்செய்யத் தொடங்கின் ஒரு குடும்பமேனும் சீரியமுறையில் நடைபெறுமா? அன்றியும் கருத்தாங்கல், கரு உயிர்த்தல் முதலியவற்றில் நம் அருமை மகளிர்படும் துன்பங்கள் அளவுடையனவோ? எத்தெய்வக் குணத்தைக்கொண்டு இப்பொறுப்புகளை அவர் தாங்கித் திரி கின்றனர் எனக் கூர்ந்து நோக்கின், அறிவுடையோர் எண்ண மும் ஆராய்ச்சியில் நுழையும். அது சாமானிய மக்களால் கைக்கொள்ளக்கூடிய பண்பன்று; மனன சீலமுடைய முனி வரும் சில நேரங்களில் கைவிடக்கூடியது; அச்சீரிய குணத்தை விடுவதால் தம் தவமுழுதும் அழியுமென உணரி னும் அதை நழுவவிடாமல் பற்றுதற்கு அம்முனிவர்க்கும்

இயலுவதில்லை; சத்தியம், சீலம் முதலிய உயர்குணங்கள் பல ஒருவரிடம் தங்கி நிலைபெறுதற்கு ஊன்றுகோலா யிருப்பது; பாண்டவர்போன்ற பெரியார் புகழை நிலைநிறுத்துவது. இத்தகைப் பெருமை வாய்ந்த குணம் இன்னது என இது காறுமே சிலர் அறிந்திருக்கலாம். அத் தூயகுணம், சீரியர் பலரால் புகழ்ந்து போற்றப்படுகின்ற "பொறுமை" என்பதே யாகும். பலராலும் மேற்கொண்டொழுக முடியாத இப் பெருங்குணம் நம்மகளிரிடம் அடிமை பூண்டொழுகுகின்றது. இன்றேல் நம் சகோதரியர் பல கடின காரியங்களையும் மிக்க பொறுமையுடன் தாங்கி முகமலர்ச்சியுடன் காலந்தள்ள இயலாது. அன்றியும் உலகம் உயர்நிலையில் நடைபெறவும் முடியாது. இதனால் உலகம் உயர்முறையில் செல்லுதற்குப் பொறுமை காரணம் என்றும், அப்பொறுமையைக் கொள் கலனாய்க் கொள்ளுதற்குப் பெண்மகளிர் காரணம் என்றும் உணர்ந்தாம்.

உலகப் பொருள்கள் யாவும் குணம், குணி ஆகிய இரு பொருள்களினாலேயே உருக்கொண்டுள்ளன என்பது யாவரும் அறிந்ததே. மகளிர் பொறுமையைக்கொண்ட கலன் எனில், மகளிர் பண்பி என்றும், பொறுமை பண்பு என்றும் புலப்படவில்லையா? இங்ஙனம் பண்பாக உள்ளதைத்தானே இயற்கை எனக்கூறுவது! இவற்றால் பண்பி மகளிர் என்றும், அவர்தம் பண்பு பொறுமை என்றும் அறிந்தாம்.

தம் மக்களுக்காக இரவு விழித்தல், பத்தியமிருத்தல் அவர்களுக்கேற்ற அரிய உணவு, உடைகளை ஈதல், தம் நலத்தை இழந்தேனும் கணவரைப் பேணல், பிற்காலம் தம் கணவன் சொத்தில் சிறிதும் தமக்கு உரிமையில்லை யென்பதை நன்குணர்ந்திருந்தும் கொஞ்சமும் வீணாக்காமல் செட்டுடன் செலவழித்து மீதப்படுத்தல், கணவன் மக்கள் துன்புறுங் கால், அத்துன்பம் தம்மைச் சார்ந்ததெனவே உள்ளூர நினைத்துப் பாடுபடல், குடும்பத்திற்குப் புகழுண்டாக்கமுயலல் முதலிய தெய்வக் குணங்களுக்கு என்ன பெயரிடலாம்!

ஒருவர் எத்தனை பிறவிகளில் பண்பட்டிருந்தால் இவ்வுயர் குணங்கள் அவருக்கு அமையும்? இதில் இன்னுமொரு அதிசயம் உண்டு. நம் மகளிர் மனச்சலிப்புடன், அன்றி முணுமுணுப்புடன், 'பிறருக்கு வந்ததை நாம் அநுபவிக்க நேர்ந்ததே' என்ற வெறுப்புடன் இத்துன்பங்களை மேற் கொள்ளுகின்றனரா? இல்லை. இல்லை. காய்தல் உவத்தல் இன்றி நோக்குவார்க்கு இது புலனாகாமலிரா. இன்னும், கணவனும் மக்களும் துன்புறுதற்குக் காரணம் தம் ஊழ்வினை யென்

பதன்று அவர்கள் கருத்து. அதை வாய்விட்டுச் சொல்லித் தம்மைத்தாமே வெறுத்துக் கொள்வதையும் கேட்கின்றோம்.

இவையாவும் தன்னலம்பாராத் தகைமையாளர் பண்புகளல்லவா? இதைத்தானே சிறந்த குணம் என்று உலகம் புகழுகின்றது! இதற்குத்தானே தியாகம் எனப் பேரமைந்துள்ளது! இவற்றால் நம் சீரிய மங்கையர்க்கு இயற்கையாக அமைந்த குணங்கள் இன்னவை எனத் தெள்ளிதின் விளக்கமுறுகின்றன வல்லவா? அவற்றை வெளியிட்டுக் கூறின் யோகிகளும், சான்றோரும் மேற்கொண்டொழுகும் பொறுமையும் தன்னலங்கருதாத் தகைமையுமே யாகும். ஆற்றொணாப் பல துன்பங்களையும் ஆற்றியிருந்த சந்திரமதியாரைப் பொறுமைக்கும், தன்னலஞ் சிறிதுங்கருதாது வறியோர்க்கு உண்டி உதவுதலையே இன்பமெனக் கருதிய அருமை மணிமேகலையாரைத் தியாகத்திற்கும் சான்று பகரலே பொருத்தமுடைத்தாகும். இவ்விரு குணங்களுக்கும் கண்ணகியார் ஒருவரே சான்றாக நிற்பர் எனக் கூறின் குறை என்ன?

இனித் திருவள்ளுவருக்கும், பெண்களுக்கும் உள்ள தொடர்பை ஆராய்வோம். செந்நாப்போதாரின் மனமாகிற தூலை நம் அருமை மகளிரை எம்முறையில் நிறுத்திக் காட்டிற்று என்பதை நோக்கல்வேண்டும். அதற்கு இவர் நூலில் நுழைதல் இன்றியமையாதது.

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவலன்று"

இஃது ஒரு நூலுக்குப் பாயிரம் இருந்தே யாகவேண்டும் என்பதை வற்புறுத்துகின்றது. அது பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என இருவகைப்படும். இவ்வின்றியமையாத பண்பு நம் தெய்வப்புலவர் நூலில் உள்ளதா என நோக்குவாம் அவர் முதலில் நான்கு அதிகாரங்களைக் கூறிப் பின்பே நூலைத் தொடங்குகின்றார். அவை, மக்கள் தவறாது கடைப்பிடிக்க வேண்டிய இறைவணக்கமும், அவ்விறைவன் அருளை வெளிப்படுத்தும் வான்சிறப்பும், அவன் முழு அருளையும் பெற்று விளங்கும் நீத்தார் பெருமையும், இவையாவும் குறைவின்றி நடத்தற்கேதுவாகிய அறன் வலியுறுத்தலுமாகும். முதல் மூன்றும் பொதுப் பொருள்களாகவும், இறுதி ஒன்று நூலின் உட்பொருளைக் குறிக்கும் சிறப்புப் பொருளாகவு மிருத்தலின் முன்னவற்றைப் பொதுப்பாயிரமெனவும் பின்னின்ற அறத்தைச் சிறப்புப்பாயிர மெனவும் பகரல் மிக்க பொருத்த முடையதாகும். அறன் வலியுறுத்தலிலுள்ள பத்துக் குறட்பாக்களையும் நுணுகி நோக்குவோர்க்கு இது நன்கு விளங்கும்.

இத்தகைய சிறப்புப்பாயிரத்தைப் பெற்றுத் தெய்வத் தன்மை வாய்ந்த திருக்குறள் அறம், பொருள், இன்பமாகிய முப்பாலையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறது. இவற்றுள் எப்பால் சிறந்தது எனக் காண்பாம். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் பொதுவாக அறம் எனவே பகரப்படும். இவ்வுண்மையை,

"சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு"

"அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில"

என்பவற்றால் அறியலாம்.

அன்றியும் அறத்திற்குப் பலபொருள்களிருப்பினும், நன்னெறி என ஒருசிறந்த பொருளுண்டு. நன்னெறியில் ஈட்டிய செல்வமும், துய்த்த இன்பமுமே பயன்படுவனவாகும். இக் கோட்பாடுகளை நுணுகி நோக்குங்கால், நம் தெய்வப்புலவர் திருவாய்மலர்ந்தருளிய முப்பால்களில் பொருளின்பங்களைக் காட்டிலும் அறமே சிறந்ததெனவும், மேற்கூறிய இரண்டும் அறத்தில் அடங்குமெனவும் தெள்ளிதின் புலப்படவில்லையா? நிற்க,

அத்துணைச் சிறந்த அவ்வறப்பாலில் இல்லறவியல் துறவற வியல் என இரண்டு இயல்கள் அமைந்துள்ளன. இவை இரண்டிலும் எது சிறப்புடையது என நோக்குவாம்:

"இல்லறமல்லது நல்லறமன்று"

"உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின்"

"ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலின் பின்"

என்னும் திருவாக்குகளால் துறவறத்தைக்காட்டிலும் இல்லறமே மேன்மையுற்றதெனத் தெள்ளிதின் புலப்படும். இது திருக்குறளை ஓதிய ஒவ்வொருவரும் நனகு உணர்ந்ததே.

ஒரு பொருளைச் சிறப்பித்துக்கூறும் பகுதிகள் பலவாயினும் அவற்றுள் சிலவே அதன் உண்மைத்தத்துவத்தை நிலைபெறச்செய்யும். அம்முறையில் இல்லற இயலில் இயம்பியுள்ள இருபது அதிகாரங்களில் அதன் உண்மைக்கொள்கையை நிலைநாட்டுவன யாவை எனக் காணுதல்வேண்டும். அவையே இல்லறத்திற்கு உயிர்நிலைகளாகும். மற்ற அதிகாரங்கள் யாவும் அவற்றை நன்கு விளக்க எழுந்தனவே.

இதனால் திருக்குறளின் முப்பாலினும் அறத்துப்பாலே கண்ணியமுடையதெனவும், அதில் இல்லறவியலே மேன்மையுற்றதெனவும், அவ்வில்லறவியலினும் சில அதிகாரங்களே குறளுக் குயிர்நிலையெனவும் உணர்ந்தாம். இனி அவ்வுயிர் நிலை அதிகாரங்கள் யாவை? அவற்றுள் உயிருக்குயிராய் ஒளிரும் அதிகாரம் எது? என அறிய முற்படல் வேண்டும்.

மேற்கூறிய உயிர்நிலை அதிகாரங்கள் சிலவற்றுள், ஒன்று காரியங்கள் நடைபெறவேண்டிய முறையைக் கூறுவது. மற்றொன்று முறையோடு செய்யும் அக்காரியங்களை அழிய விடாமல் தன் கல்வியறிவினால் மேன்மேலும் பெருகச்செய்து நிலைநிறுத்தி அக்காரியத்தைப்பயன்பெறச் செய்வது. இன்னொன்று, செயல்கள் முறையாக நடைபெறுதற்குத் துணைபுரிதல் மாத்திரமேயன்றி நற்காரியங்களை நிலைநிறுத்தும் முதற் கருவியைத் தக்க முறையில் உருப்படுத்தித் தன் நற்குண நற்செயல்களினால் அவற்றிற்கு மங்கல மூட்டவல்லது. இவை எவை எனவும் இவற்றுள் சிறந்தது எது எனவும் நீங்கள் ஒருவாறு யூகித்திருக்கலாம். அவை இல்வாழ்க்கை, மக்கட் பேறு, வாழ்க்கைத்துணைநலம் ஆகிய மூன்றேயாம்.

இவையே இல்லறத்திற்கு உயிர்நிலைகளாகும். ஆயினும் இவைமூன்றிற்கும் உள்ளொளியாய், உயிர்க்குயிராய் நின்று மிளிர்வது ஒன்றுளது. அதுவே நடுநிலைத் தீவகம்போன்று இரண்டிற்கும் இடையே நின்று இரண்டையும் பண்புறச் செய்கிறது. இன்னும் மற்ற பொருள், இன்பம் முதலியவற்றை ஒளி பெறச் செய்கின்றதும் அஃதே. அதைத்தான் வாழ்க்கைத் துணை நலம் எனக்கூறுகின்றோம்.

இதுகாறும் கூறியவாற்றான் திருக்குறளுக்கு உயிர்க்குயிராய் மிளிர்வது வாழ்க்கைத்துணை நலம் எனத் தெளிந்தாம். இங்ஙனம் ஒளிரும் வாழ்க்கைத்துணை நலத்தில் நம் மாதானுபங்கியார் யாரைப்பற்றிப் பேசுகின்றனர், யாருடைய பண்பு அதில் தவழுகின்றது என நோக்கின், முன் இயம்பிய சிறப்புகள் பலவும் வாய்க்கப்பெற்ற நம் பெண்மணிகளின் தூய தன்மையையே அவர் அதில் இயம்புகின்றனர் என்றும், அவர்தம் சீரிய நல்லியல்புகளே அதில் உருக்கொண்டெழுந்து ஒளிருகின்றனவென்றும் யாவரும் நன்குணர்வர். இவற்றை மறுக்க ஒருவராலும் இயலாது. இங்ஙனம் தெய்வப்புலவர் மனத்துலையில் பெருமதிப்போடு தூக்கப்பட்ட நம் பெண்ணுலகம் இப்போது என்ன நிலையில் உள்ளது என்பதை ஊன்றி நோக்கின் எவரேனும் வருந்தாமலிருக்க முடியுமா!

ஒருவர் வன்மையறியாது அவர்மாட்டு ஒரு பொறுப்பைச் சுமத்த அறிவற்றவரும் முன்வருவதில்லை. வரினும் அக்காரியம் பயன்படுதலுமில்லை. அங்ஙனமாயின் தெய்வப் புலமை வாய்ந்த நம் சான்றோரா வன்மையறியாது உயர் பொறுப்பை ஒருவர் மேலேற்றுவர்? ஒருகாலும் அங்ஙனம் செய்யார் என்பது திண்ணம்.

இம்முறையில் பெண்கள்மாட்டு என்ன பொறுப்புகளை இப்பெரியார் ஏற்றியுள்ளார் என நோக்குவாம்:—

இல்வாழ்க்கையை நடாத்தும் ஓர் ஆண்மகனுக்குத் துணையாய் அமையும் பெண்மணிக்கு வாழ்க்கைத்துணை என்று பேரிடலே போதியதாகும். ஆனால் செந்நாப் போதாரோ அங்ஙனம் பேரிடாது "வாழ்க்கைத்துணை நலம்" எனப் பேரமைத்துள்ளார். இதனால் இல்லறத் துணைவியாகிய பெண்மணிக்கு நற்குண நற்செய்கைகளும் பொருந்தியிருத்தல் வேண்டும் என்பது பெரியார் கருத்து எனப் புலப்படவில்லையா? இச்சீரிய குணச்செயல்களே உயரிய பொறுப்புகளை ஏற்று உண்மைவழியில் நடக்க இடந்தருமல்லவா? இப் பொறுப்பினிடத்திலேயே இல்லறத்திற்கு வேண்டிய யாவும் அடங்கியிருக்கின்றன எனக் கூறல் மிகையாகாது. ஈண்டு

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டாள்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னும் குறட்பாக்களை நோக்குக.

இல்லறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை மேற்கொள்ளல், வரவிற்குத் தக்க வாழ்க்கையை நடாத்தல், உண்டி, உடைகளாலும், பெண்மைக்குரிய சீரிய குணங்களாலும் தன்னைக் காத்துக்கொள்ளல், தன்னைக்கொண்ட கணவர்கொடியராயினும் தன் பொறுமையினாலும், நற்குணங்களினாலும் சான்றோர் புகழிற்கும், தெய்வ அருளிற்கும் பாத்திர ராமாறு அவரைத் திருத்திக் காத்தல், குடும்பத்திற்குள்ள புகழை மேன்மேலும் வளர்த்தல், தன் கடமைகளில் மறதியும், சோர்வும் இல்லாதிருத்தல் முதலிய சீரிய பொறுப்புகளை நம் பெரியார் அருங்குண அரிவையர்மேல் ஏற்றியுள்ளார்; இத்தகைய பெண்மணியும், அவள் நற்பண்புகளுமே இல்லறத்திற்கு மங்கலப்பொருள்கள் என்கின்றார். இக்கடின பாரங்களைத் தெய்வப்புலவர் நம் பெண்மணிகளின்மேல் ஏற்றியதற்குக் காரணம் என்னை? மங்கையர் அவற்றைத் தாங்கும்

பெருந்தகையாளர் என்னும் கருத்தினாலன்றோ! இஃதன்றோ நம் தமிழ்நாடும், நம் பெண்மணிகளும் செய்த தவப்பேறு! இது நிற்க.

தாம் ஈன்ற அருமை மக்களின் சான்றாண்மையை அறியும் கல்வியும், மதிநுட்பமும் தாயுலகத்திற்கில்லை, அறிவுடையோர் கூற்றே அவரைத் தட்டி எழுப்பித் தம் மக்கள் பெருமையை உணரச்செய்கின்றது என்பது பலர் கருத்து. இதற்கு

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்"

என்னும் செந்நாப்போதார் வாக்கையும் சான்று காட்டுகின்றனர்.

ஊன்றி நோக்கவேண்டிய பொருள்களுள் இஃதும் ஒன்று. அறிவுநூல் பல கற்று நுண்ணறிவு வாய்ந்த மதியூகிகளும், தம்மைப்பற்றிய சீர்மைகளையோ அன்றித் தமக்கு அன்புடையாரைப்பற்றிய நன்மைகளையோ தாமே உய்த்துணருங்காலத்தைக் காட்டிலும் சான்றோர் எடுத்தியம்புங்கால் மிக்க இன்பமடைவர் என்பது உலகறிந்த உண்மை. இக் கருத்தை ஏன் தாய்மாரிடங் கொள்ளுதல் கூடாது? அன்றியும் சிலர் நினைக்கிறபடி பண்டைத் தாய்மார் கல்வியறிவற்றவர்களாயிருப்பின் தம்மக்களைக்குறித்துப் பெரியோர் கூறும் புகழ்மொழிகளின் இயல்பையும், அவற்றின் மேம்பாட்டையும் உள்ளபடி உணர்தல் யாங்ஙனம்! அவ்வுண்மை உணர்வின்மையால் அவர்களுக்கு இன்பம் உண்டாதல்தான் எவ்வாறு? தம்மக்களின் சான்றாண்மையை அறிவுடையோர் வாயிலாகக் கேட்ட தாய் உவக்கின்றனள் எனப்பகர்ந்த செந்நாப்போதார் வாக்கே பெண்களை உயர்நிலையில், அறிவு ஆசனத்தில் நிறுத்தியுள்ளது என்பதைத் தெரிவிக்கவில்லையா?

நம் தெய்வப்புலவர், நம் அருமை மங்கையர்க்கு எத்தகைய மதிப்பை யீந்தனர்; எம்முறையில் அவர்களை அளந்து காட்டினர்; அவர்கள்மாட்டு எவ்வித பொறுப்புகளை ஏற்றி உலகநடையைச் சீர்மைபடுத்தினர் என்பதற்குச் சிற்சில குறிப்புகளை மாத்திரம் ஈண்டு எடுத்துக்காட்டினோம். இன்னணமாகிய சான்றுகள் திருக்குறளில் பல உண்டு. அவை யாவையும் இயம்ப இக்குறித்தகாலம் இடந்தராதென்பது யாவரும் நன்குணர்ந்ததே. இங்ஙனம் திருவள்ளுவரும் பழந் தமிழ்நாடும் உச்சிமேல்வைத்துப் போற்றிய பெண்ணணங்குகளைத் தற்காலம் என்ன நிலையில் வைத்துள்ளோம்! அதனால் உலகம் அடையும் நஷ்டம் என்ன!

அவர்களிடம் தோன்றும் பிள்ளைகள் அடையும் சீர்கேடுகள் யாவை! என்பன அறிவுடையோர்க்குப் புலனுகாமலிரா. எங்ஙனமேனும் உலகம் இவற்றை உணர்ந்து பெண்களின் நிலையை உயர்த்த முயலின் நம் நாடு முன்னேற்ற நாடுகளில் ஒன்ருகத் திகழும் என்பது திண்ணம்.

இதுகாறும் கூறியவற்ருல் திருவள்ளுவர், பல மதத்தினரும், பல தேசத்தினரும் உச்சிமேல்வைத்துக்கொண்டாடத் தக்கதும், அழிவற்றதும், உலகநடைக்கேற்ற அறநெறிகளை உள்ளடக்கிக் கொண்டிருப்பதுமான சிறந்த நூல் ஒன்றை இயற்றித் தந்தவரென்றும், கூறியவண்ணம் செய்யுங்கோமான் என்றும், பலருக்கும் எளிதில் அமையாத பொறுமையையும், தன்னலம்பாராத் தியாகத்தையும் பெற்றிலங்குகின்றவர் மங்கையர் என்றும், இக்குணங்கள் அவர்களுக்கு இயற்கையாகவே அமைந்துள்ளனவென்றும், பெண்களின் பெருந்தன்மையினுலேயே உலகம் நடைபெறுகின்றதென்றும், பொருட்பாலும், இன்பப்பாலும் அறத்துப்பாலில் அடங்கியுள்ளதுமன்றி அவற்றினும் சிறப்புற்று நிற்கிறதென்றும், அவ்வறத்துப்பாலில் உள்ள இல்லறம், துறவறங்களில் இல்லறமே சீரியதென்றும், அவ்வில்லற வியலிலும் இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு ஆகிய மூன்று அதிகாரங்களே உயிர்நிலையில் உள்ளன என்றும், அம்மூன்றிலும் வாழ்க்கைத் துணைநலமே உயிர்க்குயிராய், உள்ளொளியாய் விளங்குகின்றதென்றும், அதில் தெய்வப்புலவர் பெண்களின் மேல் சுமத்தியிருக்கும் சீரிய பொறுப்புகளின் தன்மைகள் இன்னவென்றும், இவற்ருல் பெண்மணிகள் தெய்வப்புலவர் மதிக்கோலில் எத்துணைக் கனமுள்ள பொருளாகத் தூக்கப்பட்டார்கள் என்றும், அத்துணைப் பெண்ணுலகம் தற்காலத்தில் நன்னிலைமையை எவ்வாறுஇழந்திருக்கிறதென்றும், அவர்களை நல்வழிப்படுத்தின் உலகம் பல நன்மைகளையடையும் என்றும் என் புல்லறிவிற்கு எட்டியமாத்திரம் கூறி முடித்தனன்.

---

**தொழில்நிலையத் தலைவர்:**—“இதென்ன தொல்லை? காலையிலிருந்து மாலைவரையிலும் “இல்லை; இல்லை” என்று வேலை கேட்பவர்களுக்கு மறுமொழி சொல்வதற்கே ஓர் ஆள்வேண்டும்போலே இருக்கிறதே!”

**வேலை தேடிவந்தவர்:**—“அந்த வேலைக்காவது என்னை எடுத்துக்கொண்டால் போதும்.”

# *அன்பும் மகவும்

[திரு. அ. சிதம்பரநாதஞ் செட்டியார் அவர்கள் M.A.]

(தரவுகொச்சகக்கலிப்பா)

*ஏனென்னைப் பிடித்திழுத் திறுகவுர மணைக்கின்றாய்?*
*ஏனென்னைப் பரிந்தணைத்தே எக்கழுத்தம் கொள்ளுகிறாய்?*
*நான்விரும்புஞ் சில்காலே நான்விரும்பப் படவேண்டும்;*
*நானுன்பால் 'விட்டி'டென நவில்கின்றேன் விட்டிலையேல்*
*நான்மிகவும் வெகுண்டிடநீ யாவாய்தான் காரணமே.'*

**ஆசிரியத்தாழிசை**

*என்றே யிப்படி யிளையதோர் குழவி*
*யன்பின் நீட்டிய கரத்தெதிர் மறுத்தே*
*அன்றொரு நாட்செய் அழுகையைக் கேட்டேன்.*

**ஆசிரியத்துறை**

*கருணைக் கடவுள்! கழிபே ரருளே!*
*அருள்க பொறுத்தே யரசே!*
*அருள்க பொறுத்தே; அறிந்தேன், நுமவே*
*கரமவை, யானம் மகவு.*

---

* Translated from Francis Thompson's **Love and the Child**

'Why do you so clasp me,
  And draw me to your knee?
Forsooth, you do but chafe me,
  I pray you let me be:
I will but be loved now and then
  When it liketh me!'

So I heard a young child,
  A thwart child, a young child
Rebellious against love's arms,
  Make its peevish cry.

To the tender God I turn:—
  'Pardon, Love Most High!
For I think those arms were even Thine,
  And that child even I!'

## குலசைத்தமிழறிஞர் திரு. ச. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்களின்

# இலங்கைச்செலவும் விரிவுரைக் குறிப்பும்

*தென்னாடுடைய சிவனே போற்றி*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி.*

நமது கழக நிறைவேற்றக்கூட்ட உறுப்பினரும், குலசேகரபட்டினம் சித்தாந்தப்புலவரும் தமிழ் வித்துவானுமாகிய திருவாளர் ச. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்கள், இலங்கையிற் செய்த சுற்றுப்பயணத்தில், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பாய், 'சித்தாந்தத்தையும் தமிழையும்' பொருளாகக்கொண்டு சுவைகொளச் சொற்பொழிவாற்றி வந்த வரலாற்றின் குறிப்பு:—

1935-நவம்பரில் கொழும்பு சென்று 1936-செப்டம்பரில் 'திருநெல்வேலி' திரும்பினார்கள். கொழும்பில் (The Kumaran Press) 'குமரன்' அழுத்தகத்தின் உரியாரும், 'தனலெட்சுமி' எனப் பெயரிட்டுப் பெருவணிகஞ்செய்து வருவாரும், தமிழ்ப்பற்று, அடியார்ப் பற்று, சைவப்பற்று முதலியவற்றில் ஆர்வமுற்றவருமாகிய ஆழ்வார்திருநகரி திரு. அன்புடையாரவர்களின் நன்முயற்சியால், கொழும்பு ஜிந்தும் பிட்டித்தெரு ஸ்ரீ சுப்பிரமணியசாமி கோவில் மண்டபத்தில் 'கந்தபுராணமும் வேள்வியும்' என்னும் பொருள்பற்றி அரியதொரு சொற்பொழிவு நடைபெற்றது. அக்கூட்டத்துக்கு வந்திருந்த யாழ்ப்பாணப் பெரியார் திரு கைலாச பிள்ளை அவர்கள், இச்சொற்பொழிவில் மிகவும் ஈடுபட்டவர்களாய், இந்தியத்தாய் நாட்டிற் பற்றுமீதூர்ந்து, விவேகானந்த சபையின் பேரவையில் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்தார்கள்.

கொழும்பு விவேகானந்த சபையில் 'பாற்கலமேற்பூனை' என்னும் அடியைப் பொருளாகக்கொண்டும், திரு. இராமநாதர் அவர்களின் சிவன்கோவிலில் 'மாசிவராத்திரி'யன்று 'ஆலய வழிபாடு' என்னும் பொருள்பற்றியும், பல்லோர் குழுமிய அன்பர் கூட்டத்தில் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்

கொழும்பு (Zahira college) சகிராக்கலாசாலைத் தலைமைத்தமிழ்ப்பண்டிதரும், இலங்கை தமிழ்ப்பாடப் புத்தகக்கமிட்டியிலும், தேர்வுக்கூட்டத்திலும் ஓர் உறுப்பினராய்த் திகழுபவருமாகிய திருவாளர் மு. நல்லதம்பி அவர்களின் நட்புரிமை பெற்றும், அவர்கள் வாயிலாய், திருவாளர் முதலியார்

J. P. செ. இராசநாயகம் (Retired C. C. S. Officer) அவர்கள் பேரன்பிற்கும் உரியாராஞர்கள். திரு. முதலியாரவர்கள் ஆங்கிலப்பெரும்புலமையுடன், தமிழிலும் சிங்களத்திலும் நிறைந்த புலமைவாய்ந்தவர்கள். மேலும், இவர்கள் பன்னூல்களின் ஆசிரியராயும், ஆராய்ச்சித்திறன்மிக்கு விளங்குபவர்களாயும் உள்ள பெரியாராவர்.

அன்னவர்கள், நமது பிள்ளையவர்களின் இனிய சொற்பொழிவிலும், பணிந்த நல் இயற்கையிலும், விரிந்த புலமையிலும் ஈர்ப்புண்டு கொழும்பில் (Radio) ஒலிபரப்புங்கருவியில் மூன்று சொற்பொழிவுகள் மூன்று திங்கள் "திருநாவுக்கரசர்" 'இனியார்', 'தமிழர்' என்னும் பொருள்களைப்பற்றி முறையே பேசச்செய்து, இலங்கை முழுவதும் தமிழ்மணமும், சித்தாந்த மணமும் மிளிரச்செய்தார்கள். பின்னர், வெள்ளவத்தை சைவமங்கையர் கழகத்திலும், கருவக்காட்டில் திருமதிலேடி அருணசலத்தார் சைவமங்கையர்கட்கெனக் கூட்டிய ஒரு தனிக்கூட்டத்திலும் இரண்டு விரிவுரைகள் நிகழ்த்தச்செய்து மங்கையர்களைச் சைவப்பற்றில் திளைக்கச்செய்தார்கள்.

வெள்ளவத்தை 'சைவமங்கையர் கழகச்'சார்பில் நடத்தப்பெற்று வருகின்ற 'சைவமங்கையர் பெண் பாடசாலை' மாணவிகளுக்குத் திருவிளையாடலிலுள்ள 'மாமனுக வந்து வழக்குரைத்த' படலத்தை நாடகவடிவில் எழுதிப்பயிற்றுவிக்கவேண்டிக்கொண்டதற்கு இணங்கி ஷை பிள்ளையவர்கள் இரண்டு மாதங்கள் தொடர்பாய் ஷை மாணவிகளை நடித்துக் காட்டுதற்குரிய முறையில் பயிற்றுவித்தார்கள். அப்பயிற்சியின் பெரும்பயன் கண்டு காணிக்கையாக சைவமங்கையர் கழகத்தார், பொருளுதவ முன் வந்தமையும், ஆசிரியரவர்கள் அதனை வாங்கமறுத்தமையும் கேட்டுமிக மகிழ்ந்தேம். ஆயினும் மாணவிகள் மனமுவந்து அளிக்கும் நற்பொருளை ஆசிரியரவர்கள் ஏற்று அறவழியிற் பயன்படுத்தலாமன்ரோ? அப்படியிருந்தும் அவர்கள் அதனை ஏற்க மறுத்தது சைவநற்பணிக்குப் பொருள் பெறுதலாகாதென்று எண்ணினார்கள்போலும். 'முனிவரும் மன்னரும் முன்னுவபொன்னுன் முடியும்' என்ற பெரியார் திருமொழியை எண்ணியேனும் அந்நற்பொருளைப் பெற்றுச் சைவ அறப்பணிக்கே அதனைப் பயன்படுத்தி யிருத்தலாகாதா? இச்செயலானது, சைவ சித்தாந்தத்தையும் தமிழையும் நூல்வாயிலாகவும் விரிவுரைவாயிலாகவும் புத்துயிரளித்துப்போற்றிவரும் திருநெல்வேலித் தென்னிந்தியசைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் நற்பெருந்தொண்டிற்கு மாருமென்று எண்ணி மறுத்தனரோ அறியேன். இது நிற்க.

பின்னர் (Galle) காலி யென்னும் துறைமுகப்பட்டினத்தில், நாட்டுக்கோட்டைத் தனவணிகர்கள் நிறுவியுள்ள திருநாவுக்கரசர் வாசகசாலையார் அழைப்பிற்கிணங்கி இவர்கள் மும்முறை ஆங்குச்சென்று சொற்பொழிவுகள் பல ஆற்றியும் இருமுறை தலைமை தாங்கிச் சிறப்புவிழாக்களை இனிது நடாத்தியும் அங்குள்ளாரை இன்பக்கடலில் மூழ்குவித்தனர். மேற்படி வாசகசாலை நிறுவியபெரியாரும், தலைவருமான (தூத்துக்குடி) திருவாளர் ச. முருகையா பிள்ளை அவர்கள் காலஞ்சென்றமைக்காக அவர்கள்மீது இரங்கற்பாக்கள் இயற்றியுதவினார்கள். அவ்வாசகசாலையில் நடந்த இரங்கற்கூட்டத்தன்று அங்குள்ள தமிழன்பர்கள் அனைவரும் கூடி, காலஞ்சென்ற பிள்ளையவர்களின் அருஞ்செயல்களை யெல்லாம் நிரல்படக்கோத்தமைத்த இரங்கற்பாக்களை ஆசிரியரவர்கள் எடுத்துமொழியக் கேட்டு, உளமுருகி அன்னாரின் பிரிவுக்கு வருந்தி அவ்வுயிர் மறுமையுலகில் நல்வாழ்வு பெறுமாறு ஒருங்கே வழுத்திச் சிறிது நேரம் மனஅமைதியுடனின்றார்கள்.

பின்னர், திருவாளர் முதலியார் செ. இராசநாயகம் J.P. அவர்களின் அழைப்பிற்கிணங்கி, தனித்தமிழ் நாடாம் ஈழநாடு (யாழ்ப்பாணம்) சென்று, அங்கு வண்ணார் பண்ணையிலுள்ள 'கலாநிலையத்தில்' புலவர் பெருமக்கள் நிறைந்த பேரவையில் இரண்டு சொற்பொழிவுகளும், யாழ்ப்பாணம், இந்து கலாசாலையில் ஒரு சொற்பொழிவும் நிகழ்த்தினார்கள்.

பின்னர், வேலணை யென்னுந் தீவில் உயிர்ப்பலியின்றி விழாக்கள் நடைபெற்றுவரும் 'முத்துமாரியம்மன் கோவிலின்' முன்மண்டபத்தில், 'கோயில் வழிபாடு' என்னும் பொருளைப் பற்றி மூன்றுமணிநேரம் கேட்டார்ப் பிணிக்குந் தகைய ஓர் அரியசொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

யாழ்ப்பாணத்தில் 'கலாநிலைய' ஆசிரியராக விளங்கும் உயர்திரு. சுவாமி உருத்திர கோடீஸ்வரர், திரு. முதலியார் திருச்சிற்றம்பலமுடையார், திரு. பண்டிதர் மயில்வாகனனார், திரு. பண்டிதர் கதிரேச பிள்ளை முதலிய அன்பர்கள் பிள்ளையவர்கள்பாற் காட்டிய அன்பும், நல்வரவேற்பும் பெரிதும் போற்றுதற் குரியதேயாம்.

கொழும்பு, ஜிந்தும்பட்டித்தெரு ஸ்ரீசுப்பிரமணியசாமி கோவிலில் கந்தபுராணம்படித்து உரைநிகழ்த்திவந்த ஆசிரியர் திரு. முருகேசபிள்ளை அவர்கள் வேண்டுகோட்கிணங்கி, இவர்கள் இடைப்பட்ட சிற்சிலநாட்களில் மேற்படிபுராணத்திற்குத் தக்கவாறு உரைநிகழ்த்தினார்கள். கும்பெனித்தெருவில் ஸ்ரீ கந்தசாமி கோவிலில் திருவாளர் அத்தி அருணாசலத்தார்

(Store-keeper, The Colombo Commercial Company Ltd.) வேண்டுகோட்கிணங்கி, "புராணங்களின் பெருமையும் நம்மவர் கடமையும்," என்னும் பொருள்பற்றி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தி அவையாரை மனமுருகச் செய்தார்கள்.

திருவாளர் முதலியார் செ. இராசநாயகம் J. P., அவர்கள், தாம் இயற்றிய 'Ancient Jaffna' "யாழ்ப்பாணம் ஆங்கிலேயர் காலம்" என்ற நூல்களையும்; தமிழ்ப் பெரும் புலவர், யாழ்ப்பாணம் திருவாளர் நெ. வை செல்லையா அவர்கள், தாம் இயற்றிய 'கதிரை நான்மணி மாலை,' 'திருமால் மருகன்,' முதலிய நூல்களையும்; யாழ்ப்பாணம் திருவாளர் முதலியார் திருச்சிற்றம்பலமுடையார், தாம் இயற்றிய 'பாக சாத்திரம்' என்ற நூலையும்; யாழ்ப்பாணம், பழந்தமிழ்ப் புலவர் திரு பொன்னம்பலத்தாரவர்கள், தாம் இயற்றிய "அருணுசல மான்மியம்" என்னும் நூலையும், நம்முடைய பிள்ளையவர்களுக்குத் தங்களன்பின் நினைவுப்பரிசிலாக வழங்கியிருக்கின்றார்கள். இதனையும் அறிந்து மிக மகிழ்கின்றேம்.

தமிழ்ப்புலவர் திருவாளர். நெ. வை. செல்லையா அவர்கள் திரு. முதலியார், செ. இராசநாயகம் J.P. அவர்களின் தூண்டுதலானும் பொருளுதவியானும் வெளியிட்ட 'கதிரை நான் மணிமாலையை' கதிர்காமத்தில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் திருமுருகன் திருமுன்னிலையில் ஆடி-வேல்விழாவின் போது அரங்கேற்றுங் காலத்தில், நம் பிள்ளையவர்களே, 'கேட்போர் குழு'வுக்குத் தலைவராய் விளங்கினமை கேட்டுக் களிப்புறுகின்றேம்.

நம் பிள்ளையவர்களை இந்திய நாட்டினின்று இலங்கை போந்து வாணிகம் நடத்திவரும் சைவமக்கள் பலரும்ஆதரித்த தோடு, நாட்டுக்கோட்டைத் தனவணிகப் பெருமக்களும் ஆதரிக்க முன்வந்ததும் பெருங்களிப்பினைத் தந்தது. பழந் தமிழ் மக்களாய் விளங்கும் யாழ்ப்பாணச் சைவப்பெருமக்கள் தாங்கள் தமிழினுஞ் சைவத்திலும் வைத்திருக்கும் பெரும் பற்றின் அறிகுறியாக நம் புலவர்களை அன்புடன் வரவேற்றுப் பேரவை கூட்டிப் பேருரை கேட்டுச் சிறப்புச் செய்தமை என்றும் மறக்குந் தகையதன்று.

நம் பிள்ளையவர்கள் இலங்கை வந்து, புரிந்த அறத் தொண்டுகளில், வெள்ளவத்தை 'சைவ மங்கையர் பெண் பாடசாலை' மாணவிகட்கு, இயற்றிய, திருவிளையாடலிலுள்ள 'மாமனுக வந்து வழக்குரைத்த' வரலாறென்னும் இனியதொரு நாடகநூலைக் கண்ணுற்ற, யாழ்ப்பாணப் பெரும்புலவர்

திருவாளர். தா. முருகேச பிள்ளை அவர்கள் மகிழ்ந்து இயற்றியுள்ள அணிந்துரை வெண்பாவைக், கீழ்குறித்திருக்கின்றோம்:-

'மாமனாய் வந்து வழக்குரைத்த மான்மியத்தை
நாமனு மின்னிசைசேர் நாடகமாய்த் — தாமனு
முத்துக் குமார சுவாமியெனு மூதறிவோன்
பத்தியொடு செய்தளித்தான் பார்''

இதனைப் போல அறிஞர்பலர் புகழ்ந்து எழுதிய அணிந்துரைகளும், பாக்களும் பலப்பல வுள்ளன.

நம் பிள்ளையவர்கள் தமது சொந்தச் செலவில் இலங்கை வந்து, நம் தமிழ் நாட்டையும், தமிழ் மொழியையும், சைவ சமயத்தையும், சிறப்பாகச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தொண்டுகளையும் நிறைவேற்றிப் பெருமைப் படுத்தியதற்காகவும், உலகப் பொதுச் சமயமாம் சைவ சமயத்துக்கும் தாய்மொழியாந் தமிழ்மொழிக்கும் இதுபோல் என்றும் பெருந்தொண்டு ஆற்றிவருமாறு எல்லாம் வல்ல இறைவன் அவர்கட்கு நீண்ட பெருவாழ்வையும் நிறைபெருஞ் செல்வத்தையும் குறைவிலா ஊக்கத்தையும் அருள்வாருக.

—K. S. மணியம், கொழும்பு.

---

## "குவீன் மேரி"

### [இங்கிலாந்தின் இணையிலாக் கப்பல்]

நீராவியால் இயக்கமுற்று முதன்முதலாகக் கடலில் இயங்கிய கப்பல் "கிளேர்மாண்டு" என்பதாம். அஃது அமெரிக்க நாட்டைச்சேர்ந்த இராபர்ட் புல்டன் என்பாரின் கப்பலாகும். 1807-ம் ஆண்டில் அஃது அமெரிக்கநாட்டு ஹட்சன் ஆற்றின் மீது உருப்பெற் றியங்கியது. அக்காலத்தார் அதனை உலக விந்தையி லொன்றாகவே கருதினார்கள். மணியொன்றிற்கு ஐந்துகல் விழுக்காடு அது நீர்மேற் சென்றது. ஏறக்குறைய அதேகாலத்தில் இங்கிலாந்திலுள்ள தேம்ஸ் ஆற்றின் மீது "மார்கரி" என்ற மற்றொரு நீராவிக்கப்பலும் இயங்குவதாயிற்று. இவையிரண்டும் மரத்தினாற் கட்டப்பட்டு நீராவியாலியங்கிய கப்பல்களே.

1807 முதல் 1845-ஆம் ஆண்டு வரையில் மரத்தாலியன்ற கப்பல்களே இயங்கிவந்தன. 1845 முதல்தான் மரத்தை விடுத்து இரும்பினாலும் எஃகினாலுமியன்ற கப்பல்கள் தோன்றுவவாயின. இதுநிற்க.

இங்கிலாந்திலிருந்து நேரே அத்லாந்திக் கடலைக் கடந்து அமெரிக்கநாட்டைச் சென்றடைதல் என்பது முடியாது என்றே ஒரு காலத்திற் கருதப்பட்டு வந்தது. நீராவிக்கப்ப லொன்றில் அவ்வாறு அத்லாந்திக் கடலைக்கடந்து செல்வதை விட மண்ணிலிருந்து நேரே மதி மண்டலத்திற்குச்சென்று வருவது எளிதாகும் என்றுகூடச் சிலர் கூறிவந்ததுண்டு. எனி னும், 1838-ல் இங்கிலாந்திலுள்ள லிவர்பூல் என்னும் துறை முகப்பட்டினத்திலிருந்து "ஸீரியஸ்" என்ற ஒரு கப்பலும், பிரிஸ்டல் பட்டினத்திலிருந்து "கிரேட் வெஸ்டெர்ன்" என்ற மற்றொரு கப்பலும் நீராவியின் உதவியால் இயக்கமுற்று, அத் லாந்திக்கடலைக் கடந்து அமெரிக்காவிலுள்ள நியூயார்க் பட் டினத்தைச் சென்றடையும் நோக்கத்துடன் புறப்பட்டன. புறப்பட்ட அவ்விரண்டும் நற்காலமாக இடையூறேதுமின்றி, முறையே $18\frac{1}{2}$ நாட்களிலும், 15 நாட்களிலும் தங்கள் பயணத்தை முடித்து வெற்றிபெற்றன. "ஸீரியஸ்" மணிக்கு ஏறக்குறைய ஏழுகல் விழுக்காடு 320 குதிரை வேகத்துடன் சென்றது என்று கணக்கிடப்பட்டுள்ளது.

அதுமுதல் பல கப்பல்கள் அவ்வழி கடந்து செல்வ வாயின. 1910ஆம் ஆண்டில், ஆங்கிலக் கப்பலான "மெ அரிட்டானியா" அத்லாந்திக்கடலை 4 நாள் 10 மணி 1 நிமி ஷத்திற்கடந்து நியூயார்க்கை அடைந்தது. அதனால், விரைந்த செலவில் அத்லாந்திக்கடல் கடப்பவர்க் களிப்பதற்கெனக் குறித்து வைக்கபபட்டிருந்த "நீலநாடா" (Blue Riband) என்னும் பரிசை அது முதன்முதல் பெற்றது. 1932-ம் ஆண்டு வரையில் அச்சிறப்பை அக்கப்பலே வகித்திருந்தது. 1933-ஆம் ஆண்டில் ஜெர்மனியைச்சேர்ந்த "பிரீமன்" என்னும் நீராவிக் கப்பல் பயணத்தை 4 நாள் 1 மணி 1 நிமிஷத்தில், அஃதாவது 9 மணிநேரங் குறைவாகச் செய்துமுடித்து, "நீலநாடா" அளிக்கப்பெற்றது.

இஃதிவ்வாறாக 1930-ஆம் ஆண்டில் இங்கிலாந்திலுள்ள "குனார்டு" கம்பெனியார் மலைபோன்றதொரு மாபெருங் கப் பலுக்கு அடித்தளம் கட்டுவிப்பாராயினர். எனினும் தொடங் கிய அவ்வேலை பொருள் முட்டுப்பாட்டால் அவ்வாண்டுடன் நின்றுவிடுவதாயிற்று.

1932-ஆம் ஆண்டில் பிரஞ்சு அரசியலார் "நார்மண்டி" என்ற பெரிய கப்பலொன்றைக் கட்டிமுடித்தார்கள். அதன் மொத்த எடை 75,000 டன்கள். மேலே குறித்த "மெஅரிட் டானியா" என்ற கப்பலைவிட $2\frac{1}{2}$ மடங்கு நிறை மிகுதியுடை யது "நார்மண்டி". அதன் நீளம் 1020 அடி. அகலம் 117

அடி. இக்கப்பலே நீலநாடாவைப்பெற்றுச் சிறப்புற்று விளங்கி வந்தது.

1930-ஆம் ஆண்டில் வேலையை நிறுத்தியிருந்த குனார்டு கம்பெனியார் மீண்டும் 1934-ல் அரசாங்கத்தாரின் உதவி கொண்டு வேலையைத் தொடங்கினர். இரண்டு ஆண்டுகளில் கப்பல் கட்டி முடிக்கப்பட்டது. அதன் பெருமைக்கேற்ற வாறு "குவீன் மேரி" என்ற பெயர் அதற்குச் சூட்டப் பட்டது. அதன் சிறப்பையும் பெருமையையுந் தெரிக்கவல்ல அமைப்புக் குறிப்புக்கள் சிலவற்றைக் கீழே தருவாம் :—

கப்பலின் நீளம் 1019 அடி 6 அங்குலம், அகலம் 118 அடி, மொத்த எடை 80,774 டன்கள். கப்பல் அலுவலாளர்களின் மொத்தத்தொகை 1101. 2139 மக்கள் அக்கப்பலிற் பயணஞ் செய்வதற்குரிய வசதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

நீர்மட்டத்திற்கு மேல் 9 தட்டுகள் அக்கப்பலுக்குண்டு. கப்பலின் பெரிய சுக்கானின் நிறைமட்டும் 150 டன்கள். மணிக்கு 40 கல் விழுக்காடு செல்வதற்கான 2,00,000 குதிரை வேகங் கொண்டது. கப்பலின் பெரிய புகைக்கூண்டின் வாய் வழி, உலகிலேயே பெரிய புகைவண்டிப் பொறியாகக் கருதப் படும் "ராயல் ஸ்காட்" என்ற பொறிகள் மூன்று ஒரேகாலத் தில் ஒருங்கே உட்செல்ல முடியும். அப்புகைக் கூண்டின் உய ரம் கப்பல் மேற்றட்டிலிருந்து 70 அடி. கப்பற் செலுத்திகள் (Propeller) ஒவ்வொன்றின் எடை 35 டன்கள். நீராவியுண்டு பண்ணுவதற்கென 27 கொதிகலன்கள் (Boilers) உள்ளே அமைக்கப்பட்டுள்ளன. மேற்றட்டின் அகலம் மட்டும் 70 அடி. நீளம் 96 அடி. நங்கூரத்தை ஈர்க்கும் சங்கிலியின் கணு ஒவ்வொன்றின் நீளம் 2 அடி.

இனி, கப்பலில் தொலைபேசி நிலையம், நாடக அரங்கம், பேசும் படஅரங்கு, 1700 நூல்கள் கொண்ட நூல்நிலையம், குழந்தைகள் விளையாடும் தனியறை, குளிக்கும் குளங்கள் இரண்டு, ஒரு செய்தித்தாள் நிலையம், கடைத்தெரு முதலி யவை அமைக்கப்பட்டுள்ளன.

இக்கப்பலைக் கரையி லணைப்பதற்கென 18,000,000 பவுன் செலவுசெய்து நியூயார்க்கில் ஒரு துறையும் 2,000,000 பவுன் செலவு செய்து சவுதாம்படனில் ஒரு துறையுங் கட் டப்பட்டன.

தெரிவரும் பெருமையும் திண்மையும், அளக்கலாகா வள வும் பொருளும், தோற்றமும் கொண்டு இலங்கும் இம்மா பெருங் கப்பல் அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்குத் திரும்

பும் பயணப்போட்டியில் சென்ற ஆண்டு வெற்றிகொண்டு நீல நாடா அளிக்கப்பெற்றது.

கப்பற் கட்டடச் சிறப்பிற்கும், பொறியமைக்கும் பெருமைக்கும் இன்றுகாறும் இக்கப்பலே மேன்மையுந் தலைமையும் பெற்று விளங்கிவருகிறது.

—காழி சிவ. கண்ணுசாமி

---

## மதிப்புரை :

### கிறிஸ்தவமும் தமிழும்

இந்நூல் மயிலை திரு. சீனி. வேங்கடசாமி அவர்களால் இயற்றப்பெற்றது. வீரமாமுனிவர், சீகன் பால்கு ஐயர், டாக்டர் போப், டாக்டர் கால்டுவேல், முதலிய கிறித்தவப்பெரியார்கள் தமிழ்மொழிக்குச்செய்த அரியபெரிய உதவிகளை எடுத்து நுவல்வது இந்நூல். மேனாட்டினர் இந்தியாவுக்கு வந்த வரலாறும், தமிழில் உரைநடை ஏற்பட்டதன் வரலாறும், முதன் முதல் அச்சுப்புத்தகம் ஏற்பட்டதன் வரலாறும், தமிழ் மொழிக்கு நன்மைசெய்த மேனாட்டுப் பெரியார் வரலாறுகளும் இதன்கண் நன்கு விளக்கப்பெற்றிருக்கின்றன. இந்நூலைப் படிக்கிற தமிழ்மக்கள் தாம் தமிழ்மொழிக்கு இதுகாறும் என்ன செய்தோம் என்பதை நினைத்து நாணுவர் என்பதில் ஐயமில்லை. மேற்குறிப்பிட்ட பெரியார் உருவப்படங்களுடன்

இதன் விலை அணா 12.

நமது கழகத்தில் கிடைக்கப்பெறும்.

### சமஸ்கிருத சுய போதினி (முதற்பாகம்)

ஆசிரியரின்றித் தாமே சமஸ்கிருதத்தைச் சிறிதளவு கற்பதற்குத் துணை புரியும் இந்நூல். இதன்கண் பெயர்ச்சொற்கள் மர வகை, பறவை வகை, விலங்கு வகை முதலிய நூறு பாடங்களில் குறிக்கப்பெற்றிருக்கின்றன. மேலே அமர சுலோகங்களும், கீழே பதம்பிரித்துத் தாதுக்களைக் காட்டிப் பொருள் குறிக்கப்பெற்றிருக்கிறது. இதன் இரண்டாம் பாகம் விரைவில் வெளிவரும்.

இதன் விலை ரூபா 1.

கிடைக்குமிடம் :—

சென்னை ஆண்டாள் தனசேகர சாச்வதநிதி லிமிடெட், மானேஜர்,
109, சைனாபசார் ரோடு, சென்னை.

நமது கழகத்திலும் கிடைக்கப்பெறும்.

# புதிய கழக வெளியீடுகள்

## கம்பராமாயணசாரம் பாலகாண்டம்

பொழிப்புரை, குறிப்புரை, ஆராய்ச்சியுரை, கதைத் தொடர்ச்சியுடன். ஆசிரியர் : ராவ் சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள். இதற்கு டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தமிழ் முகவுரையும், சுவாமி விபுலானந்தர் அவர்கள் ஆங்கில முகவுரையும் எழுதியிருக்கின்றார்கள். டெம்மி 298 பக்கங்கள்.

இதன் ராப்பர் விலை ரூ **1-10-0**. கலிக்கா விலை ரூ. **2-0-0**

முனைப்பாடியார் இயற்றிய

## அறநெறிச்சாரம்

பதவுரை, விளக்கவுரைகளுடன். இதற்கு இதுகாறும் உரை வெளிவந்ததில்லை. இஃது ஒரு சிறந்த நீதிநூலாகும்.

இதன் விலை அணா. **12**

## நீதிநூற்கொத்து மூலமும் உரையும்

இரண்டாம் பாகம்

இதன்கண் நீதிவெண்பா, அறநெறிச்சாரம், நீதிநெறி விளக்கம் ஆகிய மூன்றும் உரையுடன் அடங்கியன. கலிக்சாக் கட்டடம். விலை ரூ. **1-12-0**.

## வெண்பாப் பாட்டியல் அல்லது வச்சணந்தி மாலை

விளக்கவுரையுடன் விலை அணா. **6**

## நூற்ருெகை விளக்கம்

மனோன்மணீய ஆசிரியர் P சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றியது

ராப்பர் விலை ரூ. **1—0—0** கலிக்சா விலை ரூ. **1—4—0**

---

குறைந்த விலைப்பதிப்பு விரைவில் வெளிவரும்

## திருக்குறள் பரிமேலழகருரை

இக் கழகம் வெளியிட்டு வரும் பதினெண் கீழ்க்கணக்குத் தொகுதியில் இதுகாறும் நானுற்பது, நாலைந்திணை, கடுகெங் கடிகை மாமூலம் ஆகிய மூன்று பகுதிகள் வெளிவந்திருக்கின்றன.

இத்தொகுதியி லடங்கிய தெய்வத்திருக்குறள் பரிமேலழகர் உரையுடனும், பிற குறிப்புக்களுடனும் நான்காவது பகுதியாகப் பதிக்கப்பெறுகின்றது. விரைவில் வெளிவரும்.

நூற்சிறப்பிற் கேற்பப் பதிப்புச்சிறப்பும் அமையும்.

---

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
6, பவளக்காரத் தெரு, சென்னை.